

ஸ்ரீ விவேகானந்தரின் யாத்திரைத் திருக்கோலம்.

ஷை ஸ்ரீ ஸ்வாமிகளின் விரிவான சரித்திரம் நமது அச்சுக்கூடத்தில் பதிப்பிக்கப்பெற்றுள்ளது. இதன் விலை ரூபா 4.

உ

ஓம்

பரப்பிரஹ்மணே நம:

# ஆனந்தபோதினி

"எப்பொரு ளெத்தன்மைத் தாயினு மப்பொருண்
மெய்ப்பொருள் காண்ப தறிவு"—திருவள்ளுவர்.



தொகுதி 15 } சுக்கில௵ கார்த்திகை௴ ௧௨௳ { பகுதி 5
1929௵ நவம்பர்௴ 16௳

## கடவுள் வணக்கம்.

மரவுரி யுடுத்துமலை வனநெற் கொறித்து முதிர்
வனசருகு வாயில் வந்தால்
வன்பசி தவிர்த்து மனல் வெயிலாதி மழையால்
வருந்தியும் மூல வனலைச்
சிரமள வெழுப்பியு நீரினிடை மூழ்கியும்
தேக நமதல்ல வென்று
சிற்சுக வபேக்ஷயாய் நின்னன்பர் யோகம்
செலுத்தினார் யாம் பாவியேம்
விரவுமறு சுவையினொடு வேண்டுவ புசித்தரையில்
வேண்டுவ வெலா முடுத்து
மேடை மாளிகையாதி வீட்டினிடை வைகியே
வேறொரு வருத்த மின்றி
இரவு பகல் ஏழையர்கள் சையோக மாயினோம்
எப்படி பிழைப்பதுரையாய்
இகபரம் இரண்டினிலும் உயிரினுக் குயிராகி
யெங்கு நிறைகின்ற பொருளே. (1)

---

பரம்பரமாகிப் பக்குவம் பழுத்த
பழவடி யார்க்கருள் பழுத்துச்
சுரந்தினி திரங்கும் தானகற் பகமே
சோதியே தொண்டனேன் நின்னை
இரந்துநெஞ் சுடைந்து கண்டுயில்
பெறாமல் இருந்ததும் என் கணில் இருட்டைக்
கரந்துநின் கண்ணால் துயில்பெறல் வேண்டிக்
கருதினேன் கருத்திதுதானே (2)

# அரும்பொருள் விளக்கம்

1\. இதனால் உலக போகங்களில் மூழ்கிய எங்கட்கு உய்யும் வழி ஏது? என்று இரங்கி வினவுகிறார்

(இ-ள்.) இம்மை மறுமைகளில் எல்லா உயிர்கட்கும் உயிராகி எங்கும் பூரணமாய் நிறைந்திருக்கிற வஸ்துவே கேட்பாயாக! உன்னுடைய மெய்யன்பர்கள் உடல் நம்முடையதல்லவென்று உறுதி செய்து ஞான சுகத்தில் நாட்டங்கொண்டு உயர்ந்த பட்டாடைகளை வெறுத்து மரவுரி, தரித்தும், கிருதகுள வடை பாயசங்களில் இச்சையை நீக்கிச் சுவையற்ற மலை நெல்வன நெற்களைக் கொறிப்பதனாலும், தம் மிருப்பிடத்தில் வந்துவிழும் காட்டுச் சருகாதியவற்றை உண்பதினாலும் கொடிய பசியை நீக்கியும், நெருப்பு, வெய்யில், மழை முதலியவற்றால் வருந்தியும், மூலக் கனலைக் கும்பித்த பிராண வாயுவால் சிரசுவரை எழுப்பியும், புண்ணிய தீர்த்தங்களில் மூழ்கியும் யோகத்தினை நடத்திவந்தார்கள். நாங்களோ மகா பாவிகள். நாவினுக்கு அடிமையாகி அறுசுவை உண்டியை அளவுகடந்து உண்டும், விலையுயர்ந்த பீதாம்பரமாதியவற்றை இஷ்டப்படி அரையில் உடுத்தும், உயர்ந்த மச்சு மாளிகைகளிலேயே வசித்தும் வேறு கவலையின்றி இரவும் பகலும் மாதர் போகத்தில் மூழ்கிவிட்டோம். இத்தகைய நாங்கள் உய்வது எவ்வாறு என்பதை உரைப்பாயாக.

மரவுரி—வனங்களில் உள்ள ஒருவகை மரத்தின் தோல். இதனை ஆடைக்குப் பதிலாக முனிவர் முதலியோர் அணிவது மரபு.

வாயில்—இங்கே இருப்பிடத்தை உணர்த்தி நிற்கின்றது.

சிற்சுகம்—ஞான இன்பம்.

2\. இதனால் திருவருள் நோக்கத்தால் இன்பத்துயில் பெற விழைகின்றார். வமிச பரம்பரையாகப் பக்குவத்திற் சிறந்த பழமையான அடியார்களுக்கு அருள் கனிந்து சுரந்து இனிமையாக மனமிரங்கும் கொடையிற் சிறந்த கற்பக தருவே! சிறந்த ஒளியே! அடியேன் நின்னைச் சரண் அடைந்து இரந்தேன். நின் திருவருள் பெருமையால் நெஞ்சுடைந்தேன். கண் உறக்கங்கொள்ளாமல் இருக்கின்றேன். என்னுடைய கண்களிலுள்ள மாய இருளை மறைத்து நின்னுடைய திருவருள் நோக்கத்தால் இன்பத் துயில் கொள்ள விரும்புகின்றேன். அடியேன் எண்ணம் இதுதான்.

பரம்பரம்—வமிச பரம்பரை.

தானம்—கொடை.

இருட்டு—மாயையாகிய இருள்.

*




## உடல் நலம் பேணல்

நாகரிகம் வளர வளர உடல் நலம் தேய்ந்துகொண்டே வருகிறது. மக்கட்கு வயது நூறு என்ற பொது விதியை இனி ஐம்பதாகச் சொல்வதற்குங் கூட ஐயமாகவே இருக்கிறது. நம்முடைய முன்னோர்கள் உடற்கட்டு, ஊக்கம், உரம், திறமை, அறிவு மாட்சி முதலிய நலன்களில் தலைசிறந்து விளங்கினர்; அவர் வழி வந்த மக்கள், இன்று, அறிவு மழுங்கி, உடல் நலங் குன்றி, வறுமையில் மூழ்கி, அடிமைகளாகித் தவிக்கின்றனர். நமது நாட்டின் பழம் பெருமை யெல்லாம் இருந்தவிடம் தெரியாமல் பறந்து போய்விட்டது. அடிமை மனப்பான்மை நாட்டில் நிறைந்திருக்கிறது. சுதந்திர இன்பம் இன்னது என்பது நம் மக்கட்கு இன்னும் நூதனமாகவே இருக்கின்றது. இதற்குக் காரணம் நூற்றுக் கணக்கான வருஷங்களாகப் பிறர் வயப்பட்டு அடிமையில் பழகிக் கொண்டுவந்து விட்டமையே யாகும். இந்த அடிமைத் தனத்திற்குக் காரணம் என்னவென்று நேயர்கள் சிந்திக்கவேண்டும். உடல் நலமும் அறிவு மாட்சியும் இல்லாமை என்று சுருக்கமாகக் கூறிவிடலாம்.

உடல் நலமும் அறிவும் இல்லாத எந்த நாடும் முன்னேற்றம் அடைய முடியாது. இப்போது உலகில் முன்னேற்றம் அடைந்து அடைகின்ற எல்லா நாட்டாரும் அறிவாற்றலோடு உடல் வன்மையும் பொருந்தியவர்களாகவே இருக்கின்றார்கள். தேகத்தில் பலம் இல்லாவிட்டால் ஊக்கம் ஆண்மை முதலிய குணங்கள் அமைதல் இல்லை. ஊக்கமும் ஆண்மையும் இல்லாதவர்கள் மற்றவர்களால் அலட்சியமாக மதிக்கப்படுதல் சகஜம். தேக பலம் அற்றவர்களால் ஒரு காரியமும் செய்யமுடியாது. அவர்கள் வாழ்க்கையில் இன்பம் காணுவதும் இல்லை.

நம் நாட்டில் முற்காலத்தில் உடற்பயிற்சி பெரிதும் போற்றப் பட்டு வந்தது. ஒவ்வொரு நகரத்திலும் கிராமத்திலும் சிலம்பக் கூடங்கள் இருந்தன. முற்கால மக்கள் ஊக்கத்தோடும் உற்சாகத் தோடும் சிலம்பம், மல் யுத்தம், கழி விளையாட்டு முதலியன பயின்று வந்தார்கள். இப்போது நம் நாட்டு விளையாட்டுக்களெல்லாம் அநேக மாக மறைந்துவிட்டன. உடற்பயிற்சி இல்லாமையோடு இக்காலத் தில் நாகரிக அம்சங்களாக விளங்கும் காபி, டீ, பீடி, சிகரெட்டு முத லியவைகளும் சேர்ந்து மக்கள் தேக நலத்தைப் பாழ்படுத்தி வரு கின்றன.

மக்கள் ஆரோக திடகாத்திரர்களாக விளங்குவதற் கேற்ற முறைகளைப் பற்றி ஒரு சிறிது ஆராய்வாம். உலகத்தில் உள்ள ஜீவ ராசிகளுள் மக்கள் வருக்கம் உயர்ந்ததாகக் கருதப்படுகின்றது. இவ் வுயர்வுக்குக் காரணம் மக்கள்மாட்டு இயற்கையாக அமைந்துள்ள பகுத்தறிவே யாகும். பகுத்தறிவின் பயனாக மக்கள் விலங்கு பறவை முதலிய ஏனைய உயிர்களைக் காட்டிலும் சாந்தமான உயரிய- இன்ப வாழ்க்கை நடாத்த வேண்டியதற்கு மாறாக துன்பத்தில் உழன்று வருந்திக்கொண் டிருக்கின்றனர் என்றே சொல்லவேண்டி யிருக்கிறது. நாகரிகத்தின் உச்சியில் தாண்டவ மாடுகிறதாக நினைத் துக்கொண்டிருக்கிற மனிதன் உண்மையில் நரக வேதனையே அநுப விக்கின்றான்.

உலகத்தில் இம்மை இன்பம் அநுபவித்தற்கும் மறுமைக் குரிய உயர்ந்த நோக்கங்களை நிறைவேற்றுவதற்கும் உடல் நலம் சிறந்து விளங்கவேண்டும். உடல் நலம் இன்றேல் இவ்வுலகமும் இல்லை; மறு வுலகமும் இல்லை. இத்தகைய சிறப்பு வாய்ந்த உடல் நலம் பேணும் உணர்ச்சி இக்காலத்தில் நம்மனோர்க்கு ஒரு சிறிதும் கிடையாது என்றே சொல்லவேண்டும். உண்மையில் விலங்கு பறவை முதலிய உயிர்கள் மக்களைக் காட்டிலும் தேகாரோக்கியத்துடன் வாழ்கின்றன என்ற விஷயம் கூர்ந்து நோக்குவார்க்கு நன்கு விளங்கும். அந்தப் பிராணிகளுக்குப் பகுத்தறி வில்லை; ஆராய்ச்சி இல்லை; வைத்தியர்கள் இல்லை; வைத்திய சாஸ்திரங்கள் இல்லை; பதார்த்தகுண சிந்தாமணி இல்லை; பத்தியம் இல்லை; மாடமாளிகைகள் இல்லை; கட்டில் மெத்தை பஞ்சணை இல்லை; அங்ஙன மிருந்தும் அவைகளெல்லாம் எத்தகைய நோயும் இல்லாமல் ஆரோக்கியமாகவே உண்டு உறங்கி உற்சாகத் தோடு ஓடியும் பறந்தும் களித்து விளையாடித் திரிகின்றன. பகுத்தறி வும் ஒழுக்கமும் சிறந்து விதி விலக்குகளுக்கு அடங்கி விசேஷ சௌ கரியமும் பாதுகாப்பும் ஏற்படுத்திக் கொண்டு ஆராய்ச்சி அநுபவத் தோடு கர்வமாக வாழ்க்கை நடத்தும் மனித வருக்கத்தைச் சார்ந்த ஒவ்வொரு மனிதனும் பிறந்தது முதல் இறக்கும்வரை அநுபவிக்கும் விசித்திர வியாதிகளுக்கு அளவு உண்டா என்று கேட்கின்றோம். நவீன நோய்கள் நாள்தோறும் தோன்றிக்கொண்டே இருக்கின்

றனர். தமிழ், ஆயுர் வேதம், யூனானி, சிந்தாமணி, இங்கிலீஷ் வைத்தியர்களுக்கும் வைத்தியசாலைகளுக்கும் நாட்டில் பஞ்சமில்லை. இவ்வளவு இருந்தும் பயன் என்ன என்பதை வாசகர்களே ஊகித்து உணர்ந்து கொள்ளுவார்களாக.

மனிதன் இயற்கையோடு இயைந்த வாழ்வை மறந்துவிட்டதினாலேயே பற்பல பிணிகளுக்கும் துன்பங்களுக்கும் உட்பட வேண்டியவன் ஆனான். இக்கால நாகரிக மனிதனுக்குப் பொருத்தமான உணவும் உழைப்பும் சித்திப்பதில்லை. அதாவது அவனுடைய வாழ்க்கையில் இயற்கைத் தன்மை இல்லாமலே போய்விட்டது; எல்லாம் செயற்கை மயமான வாழ்க்கையில் மூழ்கியிருக்கிறான். இயற்கையை அடியோடு அலட்சியம் செய்துவிட்டான். மனித இயற்கைக்கு மாறான பதார்த்தங்களையெல்லாம் நெருப்பின் உதவியால் தனக்குரிய உணவு பதார்த்தமாகத் தற்கால மனிதன் ஆக்கிக் கொள்ளுகிறான். இயற்கைச் சுவையை விடுத்துச் செயற்கைச் சுவையை மேற்கொண்டு விட்டான். நாவிற்கு அடிமையாவதில் முனைந்து நிற்கிறானேயொழிய சுவை வீரியங்களில் தனக்குப் பொருந்துவது இது பொருந்தாதது இது என்பதைக் கவனிக்கின்றான் இல்லை. "அறுசுவை உண்டி" என்று பெருமை பாராட்டிக் கொண்டு உண்கின்றான். இதனால் ஏற்படும் தொல்லைகளை மனிதன் மதிப்பதில்லை.

இரண்டாவது உழைப்பைப்பற்றிக் கவனிப்போம். "எடுத்தாளாத ஆயுதம் துருப்பிடிக்கும்" என்பது ஒரு பழமொழி. ஒவ்வொரு மனிதனுக்கும் தேக உழைப்பு இன்றியமையாதது. தேக உழைப்பு இல்லாதவன் ஆரோக்கியமாக வாழமுடியாது. பெரும்பாலும் தனவந்தர்கட்கும் மூளை வேலை செய்பவர்கட்கும் வியாதிகள் விரைவில் பற்றிக்கொள்வதைச் சகஜமாகக் காணலாம். இதற்குக் காரணம் என்ன என்பதை ஒவ்வொருவரும் சிந்திக்கவேண்டும். பணக்காரர்களாக உள்ளவர்களும் மூளை வேலை செய்பவர்களும் உடலுக்கு உழைப்புக் கொடுப்பதில்லை. தேகப் பிரயாசை அதாவது வேலை செய்தலைப் பெரிய கேவலமாக நினைக்கின்றனர். பெரிய தொந்தி வளர்தலைப் பெருமையாக மதிக்கின்ற பேதைமை எத்தனை பிரபுக்களிடம் உண்டு என்பதை யாம் கூறவும் வேண்டுமோ? இதனாலேயே அற்ப ஆயுளில் மரணமும் சம்பவித்துவிடுகின்றது. சாதாரணமாகக் கூலி வேலை செய்து ஜீவிப்பவன் திடகாத்திரனாகவே விளங்குகிறான். அவனுக்கு ஒரு சமயம் நோய் அணுகினாலும் பணக்காரர்களை வாட்டுவதுபோல அவ்வளவு பிரமாதப்படுத்துவதில்லை. மருந்தின்றியே விரைவில் வியாதி குணமாகி விடுகின்றது. இதற்குக் காரணம் என்ன? பசித்து உண்பதும் உடல் உழைப்பும் என்பதைத் தவிர வேறு கூறமுடியாது.

பொதுவாக யாம் கூறவிரும்புதெல்லாம் கிரமமான உணவும் உழைப்பும் இருந்தால் தேகாரோக்கியத்துடன் வாழலாம் என்பதே. விலங்குகளும் பறவை முதலிய உயிர்களும் இயற்கையோடு இயைந்து வாழ்வதினாலேயே அவை இன்பமாகக் காலங் கழிக்கின்றன. அவைகளெல்லாம் இயற்கையான உணவையே உட்கொள்ளுகின்றன. உணவின் பொருட்டு அங்கும் இங்கும் செல்லுகின்றன. இதன் மூலம் சரியான உழைப்பும் ஏற்பட்டு விடுகின்றது. பொழுது மறைந்ததும் தத்தம் இருப்பிடங்கட்குச் சென்று சுகமாக உறங்குகின்றன. பகற்காலத்தில் உழைப்பது இராக்காலத்தில் உறங்குவது என்ற இயற்கை நியதியை அவை ஒருபோதும் மீறுவதில்லை. மனிதனோ இரவைப் பகலாகவும் பகலை இரவாகவும் செய்துகொண்டிருக்கிறான்.

உணவும் உழைப்பும் மக்களுக்கு மாத்திரம் அல்ல, எல்லா உயிர்கட்கும் கிரமமாகவும் சமமாகவும் இருக்கவேண்டும். குறைவான உணவும் உழைப்பும் மக்கட்கு நோய் உண்டாக்குவது போலவே அதிகமான உணவும் உழைப்பும் நோய் உண்டாக்கித் துன்பம் செய்யும். நமது நாட்டு மக்கள் உள்ளங்களில் இவ்வுண்மை பதிந்திருப்பதாகக் கூறுவதற்கில்லை. பதிந்திருப்பினும் பயன் என்ன? குறைந்த உணவும் நிறைந்த உழைப்பும்தான் அவர்களுடைய கதியாக இருக்கின்றன. இதனால் பிணிகளின் கொடுமை சகிக்கமுடியாத நிலைமையில் இருக்கிறது. நகரங்களின் சுகாதாரக் கேட்டைக் குறித்து யாம் அதிகம் விவரிக்க வேண்டியதில்லை. கிராமாந்தர ஜனங்களுக்குச் சுகாதார உணர்ச்சியே சுத்த சூனியம் என்பது நேரில் கண்டவர் நன்கு அறிந்திருப்பர். வீட்டைச் சுற்றிலும் குப்பைக் குழிகள், மேடுகள், மாட்டுத் தொழுவம், வீதிகளிலும் சந்துகளிலும் அசுத்தம், ஊரைச் சுற்றிலும் கள்ளி கற்றாழைகள், மல ஜல நாற்றம் ஆகியவை எல்லாம் கிராமங்கள் ஒவ்வொன்றிலும் சர்வ சாதாரணம். இவற்றோடு அதிக உழைப்பும் அரைவயிற்றுக் கஞ்சியும் சேர்ந்து நம்முடைய நாட்டுமக்களை வாட்டி வருகின்றன. இதனால் வெறும் ராஜீய, சமூக சீர்திருத்த மேடைப் பிரசங்கங்களால் நாட்டுக்கு விமோசனம் ஏற்பட்டுவிடும் என்று சுலபத்தில் நம்பமுடியவில்லை.

உண்மையில் சமூகத்தொண்டு புரிய விரும்புவோர் வீண் விவகாரங்களிலும், சுயநலத்திலும் வீழ்ந்து விடாமல் மக்கள் முன்னேற்றத்துக்கு உயிர் நாடியாக விளங்கும் உடல் நலம் பேணும் முறைகளில் அவர்கட்கு அறிவும் உணர்ச்சியும் உண்டாகும்படி முயலுதலே சாலச்சிறந்த திருத்தொண்டாகும். எல்லாம் வல்ல திருவருள் நம்மக்கட்கு நோயற்ற வாழ்வும் குறைவற்ற செல்வமும் தந்து காக்குமாறு பிரார்த்திக்கின்றோம்.

ஓம் தத் சத்.





## வேதாகம புராணம்.

(சிவானந்தசாகர யோகீஸ்வரர்)

வேதம் என்பது அறிவு நூல் என்று பொருள் தரும் என்று முன்னமே கூறினோம். ஆகமம் என்பது வந்தது என்று பொருள்தரும். எங்கிருந்து வந்ததென்றால் வேதத்திலிருந்து வந்தது, அல்லது அவற்றைக் கூறிய தேவர்களிடமிருந்து வந்தது என்பர். வேதநெறி பற்றி ஒழுகவியலாதவர்களை அனுக்கிரகிக்கும் நிமித்தம் சிவன், விஷ்ணு, பிரமா இவர்களால் கூறப்பட்ட நூல்கள் ஆகமம் எனப்படும்.

சிவனால் கூறப்பட்ட ஆகமங்கள் சிவாகமம் எனப்படும். இவை காமிகம் முதல் வாதுளமீறாகிய இருபத்தெட்டாம். இவ்வாகம நெறிபற்றியொழுகுவோர் சைவர் என்று கூறப்படுவார்கள். இவை வேதப் பொருளை விளக்குவதால் வேதம் சூத்திரமும், இவ்வாகமங்கள் அதன் பாஷியமும் (உரையும்) ஆமென்பர்.

இவ்வாகமங்களில் சரியை கிரியை யோகம் ஞானம் என்று நால்வகை ஒழுக்கங்களையும் அவற்றால் அடையும் பயனையும் விரித்துக் கூறப்பட்டிருக்கிறது. இவற்றுள் பதி, பசு, பாசம் என்ற பதார்த்தங்கள் (பொருள்கள்) கூறப்படும். பதி=சிவன், பசு=ஜீவான்மா, பாசம் ஆன்மாவின் அறிவை மறைத்து நிற்பதாகிய பாசம். இதனை மலம் என்றும் கூறுவர். மலம் என்றால் அழுக்கு என்பது பொருள். இது அறிவை மழுங்கச் செய்து, சிவத்தை அறியாமல் ஆன்மாவை மறைத்து நிற்பதனால் இப்பெயர் கூறப்பட்டது.

மூன்று பொருள் கூடி ஒன்றுபோல நின்று தத்தம் தொழிலைச் செய்வதனால் மும்மலமென்றும், ஒன்றையொன்று நீங்காமல் கலந்திருப்பதால் மலமென்று ஒருமையாகவும் கூறப்படும். மும்மலமாவது ஆணவம், காமியம், மாயை என்பனவாம். ஆணவம் என்பது செம்பிற் களிம்புபோல அநாதியாகவே ஆன்மாவைப்பற்றி நிற்கும் இயல்புள்ளதாதலால் சகசமலம், மூலமலம், சாரணமலம், என்னும் பெயர்களைப் பெற்றிருக்கும்.

காமியம் (கார்மியம்) என்பது கர்மம். கர்ம சம்பந்தம் கார்மியம் எனப்பட்டது. இது காமியம் என்று மருவி வழங்குகின்றது. ஆன்மாவினால் செய்யப்படும் கன்மமே அதுவாம். மாயை என்பது ஒளியால் ஆன்மாவுக்

குத் தனு கரண புவன போகங்களை உண்டாக்குவது. இது சிவதியாகவும் கூறப்படும். இம்மூன்றுங் கூடிய மலம் பாசம் எனப்படும். இது எவ்வாறு உண்டாயது எப்பொழுது உண்டாயதென்று அறிந்து கூறப்படமுடியாமையால் அநாதி என்பர். இப்படியே பதி, பசு, பாசம் என்னும் திரிபதார்த்தங்களும் அநாதி எனப்படும்.

ஆன்மா அநாதியாகவே மல சம்பந்தப்பட்டிருப்பதால் அது பசு என்னப்படுகின்றது. பாச சம்பந்தத்தால் சுதந்தரமிழந்துவிட்ட ஆன்மாவைப் பரதந்திரன் என்பர்.

இந்தப் பாசம் ஒழிந்தால் தன் சுயாதீனத்தைப் பெற்று நித்தியானந்த சொரூபியாக விளங்கும். இதுபற்றியே கருணாகரனாகிய பதி (சிவன்) சிருஷ்டித் தொழிலைச் செய்யத் தொடங்கினான். சிருஷ்டியாவது மாயையினால் தொண்ணூற்றாறு தத்துவங்களோடு கூடிய சரீரத்தை உண்டாக்கிக் கொடுத்து உபகரித்தல். இதனால் ஆன்மாவின் அறிவு பிரகாசிக்கும். அதனால் பதியை உணர்ந்து தவம்புரிந்து மலத்தைத் தொலைத்து முத்தியை அடையும். முத்தி இத்தன்மையது என்பதை முன்னாலேயே யோக ஞானப் பிரகரணங்களில் விரித்துக் கூறினோம் ஆண்டுக் காண்க.

பதிப் பொருளாகிய சிவனுக்கு ஐந்து தொழில்கள் கூறப்படுகின்றன. அவை சிருஷ்டி, ஸ்திதி, சங்காரம், திரோபவம், அனுக்கிரகம் என்பன. பதிப்பொருள் இவ்வைந்து தொழில்களையும் ஐந்து சொரூபங்கொண்டு நடத்துகின்றார் என்று நூல்கள் கூறுகின்றன. அதாவது சிருஷ்டிக்கும் அவசரத்தில் பிரமன், ஸ்திதியில் விஷ்ணு, சங்காரத்தில் ருத்திரன், திரோபவத்தில் மஹேசுவரன், அனுக்கிரகிக்கும்போது சதாசிவன் என்றுமாம். சிவன் என்கிற ஒன்றே அவசரபேதத்தால ஐந்து பெயர்களைப் பெற்றதென்க.

முக்தியானது பதமுக்தி என்றும், சாயுஜ்ய முக்தி என்றும் இருவகையாம். பத முக்தி சாலோக, சாமீப சாரூபம் என்று மூவகை. சாலோகமென்பது கடவுளின் உலகத்தில் வசிப்பது; சாமீபமென்பது கடவுளின் அருகிலிருப்பது; சாரூப மென்பது கடவுளின் சொரூபத்தைப் பெறுவது. சாயுஜ்யம் என்பது தான் என்றும் அதுவென்றும் வேறுபாடு காணப்படாமல் கடவுளோடு ஒன்றாய்க் கலந்து விடுதலாம். இந்தச் சாயுஜ்ய விஷயத்தில் வேதமும் ஆகமும் மாறுபடும்.

இந்தச் சைவாகமத்தில் சிரௌதாகமம் என்று மற்றொரு வகை கேட்கப்படுகின்றது. அது நால்வகைப்படும். ருரு, ததீசி, அகஸ்தியர், உபமன்யு என்பவர்களால் சொல்லப்பட்டன. சிரௌதம் என்றால் வைதிகம் என்பது பொருள். ஸ்மார்த்தாசாரம் பற்றி ஒழுகும் அந்தணர் இவ்வாகம முறைப்படியும் பூஜிப்பார்கள். அவர்களுக்குச் சாம்பவர் என்று பெயர்.

விஷ்ணு கூறிய ஆகமத்தில் பாஞ்சராத்திரம் ஒன்றே பிரபலமாகக் காணப்படுகின்றது. ஆனால் விஷ்ணுவும் பல ஆகமங்கள் கூறினார் என்று

நூல்களால் தெரியவருகின்றது. பாஞ்சராத்திரம் ஒன்றே இப்பொழுது அனுஷ்டானத்திலிருக்கின்றது. பாரதத்திலும் பாஞ்சராத்திரங் கூறிய முறைப்படி விஷ்ணுவை ஆராதிக்கவேண்டும் என்று கூறப்பட்டுள்ளது.

பிரமனுல் கூறப்பட்ட ஆகமம் ஹிரண்யகர்ப்ப மென்னும் பெயரால் அழைக்கப்பட்டது. அவ்வாகமப்படி ஆராதிப்போரைக் காணேம். அவ்வாகமமும் இப்பொழுது காணப்படுவதில்லை.

இவையெல்லாம் ஒவ்வொரு காரணம் பற்றிக் கூறப்பட்டபடியால் எல்லாம் அனுஷ்டிக்கத் தக்கனவே. ஆயினும் தத்தம் குலப் பெரியோர் எந்த முறைப்படி அனுஷ்டித்தார்களோ அவ்வாறே அனுஷ்டிக்க வேண்டும்.

இனிப் புராணங்களைக் கவனிப்போம். இவை "இதிஹாஸ புராணுப்யாம் வேதாந்த ப்ரகாச்யதே" என்று சாந்தோக்யாதி உபநிஷதத்தில் புகழ்ந்து கூறப்பட்ட சர்வலோக்கிய முடையனவே. இந்தப் புராணங்கள் வேதத்தின் ஞானபாகத்தை விளக்குவதாமென்று கூறுவர். கருமத்தை விளக்குவது ஸ்மிருதிகளும் ஞானத்தை விளக்குவது புராணமுமாம்.

அதனுல் ஞானமார்க்கத்தை அடையவிரும்புவோர் புராணங்களைக் குருமுகத்தால் கசடறத் தேர்ந்துணர்தல் வேண்டும். இப்புராணங்கள் வியாச மஹாரிஷியால் வெளியிடப்பட்டன. இவை மஹா புராணங்களென்றும் உப புராணங்கள் என்றும் இரு பகுதியனவாம். மஹா புராணங்கள் பதினெட்டு, உபபுராணங்கள் பதினெட்டு. இவற்றுள் மஹா புராணங்களே வியாச முனிவரால் கூறப்பட்டன. உபபுராணங்கள் வேறு பல ரிஷிகளால் கூறப்பட்டனவாம். ஆதலால் அவை அவ்வவ்விருடிகளின் பெயர்களால் விளங்கும். மஹா புராணங்களே சிலாக்கியமுடையன; அவைகளே வேதத்தின் ஞான பாகத்தைச் செவ்வனே விளக்குவன. மஹா புராணங்கள் பதினெட்டின் சிவமகிமையை விளக்கும் புராணங்கள் பத்து, விஷ்ணு மகிமை கூறும் புராணங்கள் நாலு, பிரமனுக்குரிய புராணங்கள் இரண்டு, சூரியனுக்கு ஒன்று, அக்கினிக்கு ஒன்று ஆகப் பதினெட்டாம். இவற்றுள் ஒவ்வொன்றும் பூர்வகாண்டம் உத்தரகாண்டம் என்று இரு பகுதியாய் விளங்கும். இந்தப் புராணங்கள் கூறிய வழியில் நின்று அவ்வாசாரம் பற்றி ஒழுகுவோர் பௌராணிகர் என்று கூறப்படுவார். அவர்கள் அதிக சொற்பமானவர்கள். இப்பௌராணிக மதாவலம்பிதர்களில் பாகவதர் என்போர் மிகுதியானவர். வப்பிரபட்டர் என்ற உத்தர தேச வித்துவானுல் கூறப்பட்ட விஷ்ணு பாகவதமே இவர்களுக்குப் பிரமாண நூலாகும். அதிலும் தசமஸ்கந்தம் என்கிற பாகமே முக்கிய பிரமாணமாம். அதில் கிருஷ்ணனுடைய சரித்திரமே முற்றுங் கூறப்பட்டது. இதைப் பிரமாணமாகக் கொண்டு நடப்பவரே இக்காலத்தில் பாகவதர் என்பவராம்.

# ரஷ்யாவின் புதிய கல்விமுறை

ம. வி. சிங்காரவேலு முதலியார்.

இந்தக்காலம் காங்கிரசுகள் காலம். எங்குப்பார்த்தாலும் மூலைக்கு மூலை பொதுக்கூட்டங்கள், காங்கிரசுகள், மகாநாடுகள், லீகுகள் (Leagues) கூடுவதும் பல தீர்மானங்களை நிறைவேற்றுவதுமாக இருக்கின்றது. உலகத்திலுள்ள பல தேசங்களிலும் நடைபெறும் கூட்டங்களைப்பற்றியும், சங்கங்களைப்பற்றியும் பத்திரிகை வாயிலாகவும், பிரசங்கங்கள் வாயிலாகவும், சம்பாஷணைமூலமாகவும், பொதுஜனக் கூட்டங்களாலும், சிறப்பாகச் சினிமா படக் காட்சிகளைக்கொண்டும் தெள்ளிதில் அறிகிறோம். டென்மார்க் (Denmark) தேசத்தின் சிறப்பு நகராய எலிசினோரில் (Elsinory) கல்வி சம்பந்தமான விஷயங்களைக் குறித்து ஆலோசனை செய்தற்கு உலகின் பல தேசங்களிலிருந்தும் 2000 பேர் தேர்ந்தெடுத்த பிரதிநிதிகள் குழுமியிருந்தனர். அங்கே நமது இந்திய நாட்டிலிருந்தும் பத்துப்பேர் ஆஜரா யிருந்தார்கள். கல்வித்துறையில் ஆங்காங்குப் பல்வேறு தேசங்களிலும் எடுத்துக்கொள்ளும் முயற்சிகளைப் பற்றியும், செய்யவேண்டிய ஆதர்ச விஷயங்களையும் தெளிவாகப் பிரசங்கித்தனர். கல்வியில் பிற்போக்குற்றிருக்கும் நாடுகளுக்குக் கல்வியில் உன்னத நிலையிலிருக்கும் நாடுகளைப் பின்பற்றி விருத்தி அடைய நல்ல சந்தர்ப்பங்கள் ஏற்படுகின்றன. இது சர்வதேச சங்க ஸ்தாபனத்தால் ஏற்படக்கூடிய நன்மையென யாவரு முணரலாம்.

ஒவ்வொரு தேசத்திலும் கல்வி யபிவிருத்தி, போதனுமுறை விளக்கம், முதலியவற்றில் என்னென்ன மாறுதல்கள் நிகழ்கின்றன. அவற்றின் பலன்கள், தன்மைகள் யாவற்றையும் கல்வி வளர்ச்சி முறையில் அபேக்ஷையுள்ள நாடுகள் கவனிக்கவேண்டும். ரஷ்யா (Russia) தேசத்தின் புதிய போதனுமுறைகளைச் சிறிது நோக்குவோம்.

ரஷ்யாவில் பொருளாதார நிலைச் சிறப்பில்லா விடினும், வறுமை சிற்சில விஷயங்களி லிருப்பினும், கல்வி வளர்ச்சியில் பல பரிசோதனைகள் செய்து வருகின்றனர். பொதுவாக ரஷியக் கல்வி யியக்கத்தை கம்யூனிஸ்டு (Communist) அல்லது தொழிற்கல்வி யியக்கமென்று கூறலாம். ஆனால் அவர்கள் முக்ய நோக்க மென்னவெனில் கல்வியின்மை யென்ற கடனைக் குறைத்தலா (நீக்கலா)கும். அவர்களுடைய கல்வி முறையில் தொழிலுக்குப் பிரதான ஸ்தானமும் ஆதிக்கமும் கொடுக்கப்படுகின்றது. கல்லூரிகளில், தொழிற் கல்வியிலாகட்டும், சிற்பசித்திர கல்வியிலாகட்டும், மற்ற

பலவித கலைகளிலும் ஆண் பெண் என்ற வித்தியாசங்களுக்கு எந்தவிதமான முக்யமும் கொடுக்காமல் சமத்துவமே கொண்டாடி வருகின்றனர். பெண்கள் ஆண்களைப் போலவே பல கஷ்டமான தொழில் கல்வியிலும் ஊக்கத்துடன் பயின்று சிறந்த பட்டங்களைப் பெற்றிருக்கின்றனர். ஆண் பிள்ளைகள் பெண் பிள்ளைகளது என்று கருதப்பட்ட காலுசட்டை பின்னல், போன்ற வேலைகளிலும் உழைத்து வருகின்றார்கள்.

18-வயதிற் குட்பட்ட பிள்ளைகளுக்கு மதத்தைப்பற்றி போதிக்கக் கூடாதென்ற திட்ட மேற்படுத்தி யிருக்கின்றனர். தாங்களாக உய்த்துணருவதற்குச் சக்தி, அனுபவம் உணர்ச்சி ஒன்று மில்லாத இளம் வயதில் குழந்தைகளுக்கு விஷயங்களில் கட்டாய நம்பிக்கை ஏற்படுத்தி விட்டால் அவர் அவர்களிடம் சிந்தனை சக்தி குறைவுபடும் என்றும், குருட்டு நம்பிக்கையும், மூட பக்தியும் பிடிபடு மென்றும் கருதியே இத்தீர்மானத்தை நிறைவேற்றி யிருக்கிறார்கள். மற்றொரு முக்கியமான விஷயம் சிறுவர்களுக்குத் தேவதைகளைப் பற்றிய கதைகளும், கட்டுக் கதைகளும், (Fairy Tales, legends) சொல்லக்கூடா தென்பதாகும் அல்லது அவற்றைப் பாடப் புத்தகங்களாகவாவது வைக்கக்கூடா தென்பதாகும். அதற்கு அவர்கள் கூறும் காரணமாவது பிள்ளைகளுக்குப் பயம், கற்பிதத் தொந்தரவுகள் அவற்றால் ஏற்படுகின்ற தென்பதே. நம் நாட்டில் இந்த இனத்தைச் சேர்ந்த புத்தகங்களுக்குக் கணக்கில்லை. பிறந்தது முதல் பூச்சாண்டி, பூனை, பேய், பூதம் பிசாசு பயமுறுத்தலும், பின்னர், தீயில் வாட்டுதலும், நரகக் குழிகளும், சுவர்க்கங்களும் பிள்ளைகளை தாங்களாக விஷயங்களை யோஜித்தல் சந்தேகித்து, பரீக்ஷை செய்து உண்மை உணர்தல் என்னும் மார்க்கமே குதிரைக் கொம்பாகி விட்டது.

கல்விக் குறைவு என்னும் கடனைத் தீர்ப்பதற்குக் கட்டாயப் படிப்பை அமூலுக்குக் கொண்டுவந் திருக்கின்றனர். ஆனால் அது அவ்வளவு பூர்ணமாக முடிகிறது என்று கூறுதற்கில்லை. 1926-வருஷம் டிசம்பர் மாதம் எடுத்த கணக்கில் பிள்ளைகளின் படிப்பிற்கு (Juvenile. Schools) 114,786 பள்ளிக்கூடங்க ளிருப்பதாகவும் அவற்றில் $1\frac{1}{2}$-கோடி மாணவர்கள் பயின்று வருவதாகவும் குறிக்கப்பட் டுள்ளது. அக்கலாசாலைகளுள் 5, 247 தொழிற் கல்விச் சாலைகள் என்றும் அவற்றில் 8 லக்ஷம் மாணவர்க ளிருக்கிறார்கள் என்றும் 52,000 வாசகசாலைகளும், சங்கங்களும், தேகப் பயிற்சி சாலைகளும் இருக்கின்றன என்றும் அறியக் கிடக்கின்றன. ஆனால் அந்த அறிக்கையிலிருந்து இவ்வளவையும் வைத்து நிர்வகித்தற்குத் தேவையான பொருளின் வருவாய் எங்கும் குறிப்பிடப்படவில்லை. சர்க்கார் இலவசச் சம்பளமன்றி (Scholarships) தொழிலாளிகள் கூட்டத்தாரும், வர்த்தகர் சங்கங்களும் (Trade Unions) இன்னும் இவை போன்ற பல சங்கங்களும் மாண

வர்களுக்கு ஸ்காலர்ஷிப்புகள் கொடுத்து வந்தன. கம்யூனிஸ்ட்ஸ் (Communists) தொழிற் பிரதானக் கட்சியினுடைய ஆதிக்கம் ரஷ்யாவில் விளங்குகிறது. தொழிலாளிகளின் (ஏழை) குழந்தைகளுக்கு படிப்பதற்கு நல்ல சாதனங்களும் சந்தர்ப்பங்களு மேற்பட்டிருக்கின்றன என்று கூறுகிறார்கள். கல்வி பணக்காரருக்கு மட்டும், பிரபுக்கள் வம்சத்தவர்க்கு மட்டும் அல்லது எந்த ஒரு வகுப்பினருக்கும் என்ற கட்டுப்பாடும், சொல்லும் அழிந்து விட்டது. ஆனால் லெனின் சிமாட்டி சம சந்தர்ப்பம் இப்போதும் ஏற்படவில்லையென்றும், தொழிலாளிகளின் ஆதிக்கமென்றும், புத்தி கூர்மையான நல்ல குடும்பத்தை (பிரபுக்கள் வம்சத்தை)ச் சார்ந்த பல மாணவர்களுக்கு கொடுமை செய்யப்படுகிறதென்றும் முறையிடுகின்றனர்.

### அனுபோக வாழ்க்கைக் கேற்ற முறை

ரஷ்யாவின் கல்வி முறைக்குச் சிறப்பு ஏற்படுவதெல்லாம் அது அநுபோக வாழ்க்கைக்கு ஏற்றதாயிருக்கின்றதென்பதே. கிரிச் முறையிலிருந்து கிண்டர் கார்ட்டன் முறைவரையும் அநுசரிக்கப்படுகிறது. குழந்தைகளின் நுண்ணறிவை விருத்திச் செய்யவேண்டிய கருவிகளையும் சாதனங்களையும் திரட்டி வைத்திருக்கின்றது. பாடங்களை, விஷயங்களைப் பிள்ளைகளும் உபாத்தியாயர்களும் சேர்ந்து படிப்பார்கள். தொழிற்கல்விக்கு வாழ்க்கைக்கு முக்யமான வேலை கற்பிப்பதற்குப் பிரதானம் கொடுக்கப்படுகின்றது.

### "சிக்கலான" முறை

ரஷ்ய போதனு முறை உலகத்தின் மற்ற தேசங்களில் கையாளப்படும் எல்லா முறைகளுக்கும் மாறுபட்டிருக்கின்றது. அதன் முக்ய தத்துவம், என்னவெனில் பிள்ளைகளே விஷயங்களை தனித்தனி பரிசோதனை செய்து உணருவதும், கூட்டமாகக் கூடி பரீக்ஷித்து அறிவதுமாகும். ஒரு சிறுவர்கள் பள்ளிக்கூடத்தில் அசைந்தாடிக்கொண்டிருந்த சிவப்புக்கொடியால் பின்வருமாறு வரையப்பட்டிருந்தது:—"நாங்கள் ரொட்டிகளை இலவசமாகச் சாப்பிடுவதில்லை; நாங்கள் அவற்றிற்குப் பதிலாகத் துணி நெய்து கொடுக்கிறோம்." பிள்ளைகள் சிறு சிறு கூட்டமாகச் சேர்ந்து பல இடங்களுக்குச் சென்று விஷயங்களை அறிந்து வருவர். சில பெரிய மாணவர்கள் வியாபாரத்தைத் தமது பாடமாகக் கொண்டிருந்தனர், ஐந்து அல்லது பத்துப் பேர் சேர்ந்த கூட்டமாக ஐக்ய நாணயசங்கம் பொருட்சாலைக்கு(Co-operative Store) சென்றிருந்தனர். மற்றும் சில கூட்டங்கள் தனித்த வர்த்தகரிடம் சென்றிருந்தனர். எல்லாரும் ஒவ்வொரு தனித்த கூட்டத்தினருடைய ஆராய்ச்சிகளைக் கேட்டு உணர்ந்தனர்.

இதுபோலவே பல விஷயங்களுக்கும் சிறு சிறு கூட்டங்களாக மாணவர்கள் சென்று விஷயங்களை உணர்ந்து வருகின்றனர். தாமாராய்ந்த

வற்றை மற்றவருக்கு எடுத்துச் சொல்லுகின்றனர். ஒரு வகுப்புக் கிராம வாசத்தையும், நகர வாசத்தையும் ஆராய்ந்தது. முதலாவதாகத் தம்மைச் சுற்றிலுமுள்ள இயற்கைச் செயற்கைப் பொருள்களைப்பற்றி ஆராய்ந்தனர். பின்னர் கொஞ்சம் கொஞ்சமாக வேறு தூரத்திலுள்ள பொருள்களைப்பற்றியும் தெரிந்துகொள்வார்கள். உபாத்தியாயரும் பிள்ளைகளும் சேர்ந்துதான் கற்க வேண்டிய பாடத்தைத் தேர்ந்தெடுத்துக் கொள்வார்கள். ஒரு நதியைப்பற்றி எடுத்துக்கொண்டால் அதன் தீரத்தைக் குறித்த அமைப்பு, உபயோகம், பொருளாதாரம், சரித்திர சம்பந்தம் முதலிய எல்லா விஷயங்களும் வந்துவிடும். இதற்குப் படம் (Maps), அட்டவணை (Chart), கணக்கு, வியாசம், வர்ணந்தீட்டல் முதலியனவும் சேரும். இந்த முறைதான் "சிக்கல் (Complex) முறை என்று கூறுகிறார்கள். இவை எல்லாம் பரிசோதனை முறையிலேயே இருக்கின்றன. கூடாரமிறங்கல், வெளியிடங்களுக்குச் செல்லுதல் எல்லா ரஷ்ய போதனாமுறையில் சுதந்தரம் மலிந்து விளங்குகின்றதைக் காண்பிக்கின்றன.

## சுய ஆட்சி

ஒவ்வொரு வகுப்பும் பிள்ளைகளாலேயே அடக்கி அமைதியுடனிருக்கச் செய்யப்பட்டு வருகின்றது. பிள்ளைகளை அடிக்கிறதென்பதே கிடையாது. மாணவனைக் கன்னத்தில் அடித்ததற்காக ஆசிரியர்கள் விலக்கப்பட்டிருக்கின்றனர். இவை யெல்லாம் உணர்ச்சி யுடையவர்கள் மதிக்கத் தக்கன. நம்மிந்திய நாட்டில் பல ரஷ்ய முறைகள் நலன்தரும் என்றே நினைக்கின்றோம். ஆனால் அவை பெரும் பரிசோதனை செய்தறிய வேண்டியவை. நமது அரசாங்கமும், நாமும் எல்லாத் துறையினும் முக்யமான கல்வித் துறையில் சிறிது அதிகமான சிரத்தை எடுத்து உழைத்தால்தான் நம் நாடு க்ஷேமமடையும். மற்ற நாடுகளுக் கிடையில் சமமாக நிற்கமுடியும். அன்பர்கள் இதைக் கவனிக்கவேண்டும்.

### ஏமாந்துவிடாதே

நீ ஏதாவது பேச வாய் எடுப்பதற்குள்ளே "ஆமாம்" "அப்படித்தான்" "ஓஹோ" "சரி சரி" "உள்ளது" "நல்லது" என்று ஒத்துப் பாடுகிறவர்களை ஒருபோதும் நம்பாதே. அந்த ஆசாமிகள் உன்னிடம் ஏதோ காரியசித்திக்காகவே இந்த நயவஞ்சக வேஷம் போடுகிறார்கள் என்று திண்ணமாய் நம்பு. முன்கோபம், படபடப்பு, எதிர்ப்புக் குணம் உள்ளவர்களை நம்பலாம். சமயத்தில் உயிரும் கொடுப்பார்கள். ஆனால் கொஞ்சம் பழகுவதற்குக் கஷ்டமாய் இருக்கும். உன்னுடைய பொறுமை அவர்களைச் சில சமயங்களில் பணியச் செய்துவிடும்.

# ஐவேலசதி.

——:(o):——

கோவை-திரு. சி. து. நாராயணசாமி முதலியார்.

ஐவேலசதி என்னும் பெயருடைய இடையர் மரபினன் ஒருவன், அருந்தமிழ் மூதாட்டியாராகிய ஔவையால் பாராட்டப் பெற்றுளான் என்று அறியப்படுகிறது. ஆயின், இவனது வரலாறு தெளிவாய் அறிவதற்கின்றி அந்தகாரப்பட்டுள்ளது. திருவாளர்கள் அனவரத விநாயகம் பிள்ளை, M.A., L.T., அவர்களும், மணி திருநாவுக்கரசு முதலியாரவர்களும், வெளியிட்டுள்ள ஔவையார் வரலாறுகளில் 'ஐவேல சதி' பாண்டி நாட்டு முல்லை நிலத்தில் ஆடு மேய்க்கும் அற்பத் தொழிலுடைய ஒரு நனிபேதையென்று கூறியிருக்கின்றனர். 'கொங்கு மண்டல சதகத்தில்' மட்டும் முற்கூறியவர்களின் செய்திக்கு. 'ஐவேலி' என்னும் சிற்றூர், கொங்கேழ் சிவஸ்தலங்களில் ஒன்றாகிய திருச்செங் கோட்டுக்குச் சமீபத்திலுள்ள சங்ககிரி தூர்க்கம் ரயில் நிலயத்திற்குக் கிழக்கில் இரண்டு மைல் தூரத்திலுள்ளதென்றும், அவ்வூரில் அசதி என்னும் இடையர் மரபினன் சேனைத் தலைவனாக விருந்து ஓர் இரவில் அங்கு வந்த ஔவையார்க்குப் பொன்னிலையிட்டுப் போனகம் பரிமாறி யுண்ணச் செய்து, தன்மீது 'ஐவேலசதிக்கோவை' என்னும் பிரபந்தம் பெற்றானென்றுங் கூறப்பட்டிருக்கின்றது. இவைகளில் எது கொள்ளத் தக்கது? எது தள்ளக்கூடியது? என்று அறியாது மயங்குகின்றோம். ஆயின், ஐவேலி பாண்டி நாட்டின் கண்ணது என்று கூறவந்த ஆசிரியர்கள், அதற்கு ஆதாரங் காட்டினாரில்லை. கொங்குமண்டல சதக ஆசிரியர், ஐவேலி கொங்கு நாட்டில் உள்ளதென்பதற்கு,

"தெய்விகமான தமிழ்ப்புல வோர்கள் தினமுளங் கொள்
பொய்தீ ருரையெம் பிராட்டியா ரௌவை புனைந்து புகழ்
செய்கோவை யேற்ற திறலோ னசதி செழித்து வளர்
மைதாழ் பொழிறிகழ் ஐவேலி யுங்கொங்கு மண்டலமே" (45)

என்ற அம்மண்டல சதகத்துச் செய்யுளை ஆதாரங் காட்டியதுடன், அவ் ஐவேலி சங்ககிரி மிட்டாவிலுள்ள ஒரு கிராமம் என்றும், அது அரசுரிமை மதிப்பிலும் இடம் பெற்றிருக்கிறதென்றும், இப்பொழுது அக்கிராமம் நத்தமாய்ப் போயினும், இடையர் மரபினர் வீடு இருநூறுடையதாய் 'இடையபட்டி' என்ற ஊர்ப்பெய ருடையதாய் இருக்கிறதென்று சான்றும் காட்டியிருக்கின்றனர். ஆதாரத்துடன் கூறப்படும் எவ்விஷயமும் உண்மையெனக் கொள்வது அறிஞரது கடமையானதால், ஐவேலியும், அசதியும் கொங்கு மண்டலத்தில் சங்ககிரி தூர்க்கத்துப் பக்கத்தினதென்று தெளிவுறுகின்றது.

ஔவையார் வரலாறுகளில், அசதி நனிபேதையென்று கூறியிருக்க, அசதிக் கோவையில், அசதி சேனைத்தலைவனாக விளங்கியிருந்தானென்று கூறப்பட்டிருக்கிறது. அச்சொற்றொடர்—"சேனைத் தலைவனைச் செங்கோ

லசதியை'' என்பது. 'நந்தமண்டல சதகத்'திலும், இவ்வசதி "புவிமீதிற் றவஞ், செய்வோன் றனினும் பசுக்காவன் மிக்கெனச் செய்யு மன்பன் மைவேலை வண்ணன் சதியுடன் வாழ்நந்த மண்டலமே'' எனப் பாராட்டப் பட் டிருப்பதனாலும் இவன் பேரறிவு படைத்த பெருவீரனாய் பசுக்களை நன்கு பரிபாலிக்கும் ஞானசிவனாய் விளங்கி யிருந்தானென்றும் அறியப் படுகிறது. இவ்வுண்மை யிருக்க, 'அசதி தனிபேதை' என்றும், 'ஐவேலி' பாண்டிநாட்டகத்த தென்றும், ஔவையார் வரலாற்றில் கூறியிருப்பதை எவ்வாறு நம்புவது ? அறிஞர்கள் ஆராய்வாராக.

ஔவையார் வரலாறுகளில், ஔவையார், ஐவேலசதிமீது கோவை பாடிய வரலாறு அடியில் வருமாறு காணப்படுகிறது.

"ஒரு காலத்து ஔவையார் பாண்டி நாட்டில் காட்டுமார்க்கமாகப் போய்க் கொண்டிருந்த பொழுது அவரைப் பசிநோய் வருத்த, அவர் அங்கு ஓர் ஆட்டிடையன் ஆடு மேய்த்துக்கொண் டிருத்தலைக் கண்டு அவனை அணுகி, 'நீ கொண்டுவந் திருக்கும் உணவில் எனக்கும் கொஞ்சம் கொடுப் பாய்' என்றனர். அவனும் அங்ஙனம் கேட்ட ஔவையார் விருப்பத்தின் படி அவ்வுணவில் பாதியை முகங்கோணாது அகமகிழ்ந்து அவர்க்கு உபசரித் திட்டு உண்ணச் செய்தனன். ஔவையாரும் அவன் அன்புக் குவந்து அவ் வுணவையுண்டு பசிவருத்தம் தீர்ந்தனர். 'தினைத் துணை நன்மையையும் பனைத் துணையாகக் கொள்ளுவது பெரியோரது இயல்பாதலால்' அதன்படி ஔவையார், பசியறிந் துதவிய அவனைத் தமது திருந்திய நாவால் சிறப் பிக்க வெண்ணி உன்பெயர் என்ன? என்றனர். அவன் தன் பெயர் மறந்த பேதையானதால் அவர் வினாவிற்கு உத்தரமாக 'அசதி' என்றான். அசதி என்ற தால், அவன் குறித்த பெயர் அப்பொழுது தன் ஞாபகத்தில் இல்லை யென் பது. பின்னர் 'உன் பெயரையாவது சொல்' என்றனர். அதனையும் அவன் மறந்தேன் என்றனன். அதன் பின்னர் ஔவையார், 'உன் ஊரிலுள்ள அடை யாளங்களையேனும் சொல்' எனக் கேட்க அவன் என் ஊரில் "ஐந்து வேல மரமுண்டு'' என்றனன். அவன் பேதைமைக்குப் பெரிதும் இரங்கிய ஔவையார், அவன் தன் பெயரையும், தன் ஊர்ப் பெயரையும் மறந்ததனால் அவனுக்கு மறதி என்னும் பொருளைத் தரும் அசதி என்னும் பெயரையும், அவன் தனது ஊரிலே ஐந்து வேல மரங்கள் உண்டு என்றமையால் அதற்கு ஐவேல் என்ற பெயரையும் அமைத்துக்கொண்டு "அசதிக்கோவை'' என் னும் பெயரில் நவரசங்களும் நனி சிறக்கச் செய்யுட்க ளெல்லாம் அகரத் தையே முதன்மையாகக்கொண்டு மோனைநலம் பொருந்த இனிய பிர பந்தம் ஒன்று பாடி முடித்தனர் என்பதே.

அறிஞர்கட்கு இன்பச் சுவையை இனிதூட்ட வல்ல அவ்வருஞ் செய் யுட்கள் இப்பொழுது முழுதுங்கிட்டுவது அருமையா யிருக்கிறது. எம் மிடத்துள்ள பழைய ஓலைச் சுவடிகளில் ஒன்றில் 10-செய்யுட்கள் தனியாக எழுதியிருக்கக் கண்டோம். இறந்து படாமலிருக்கவும், தமிழன்பர்கள் சுவைத் தின்புறவும் அச் செய்யுட்களை இதன் கீழ்த் தருகின்றோம். அவை வருமாறு:—

"அற்றாரைத் தாங்கியவைவே லசதி யணிவரைமேன்
முற்றா முகிழ்முலை யெவ்வாறு சென்றனள் முத்தமிழ்நூல்

கற்றார் பிரிவுங்கல் லாதா ரிணக்கமுங் கைப்பொருளொன்
றற்றா ரிளமையும் போலே கொதிக்கு மருஞ்சுரமே.” (1)

அருஞ்சஞ் சலங்கொண் டவைவே லசதி யகல்வரையின்
னிருஞ்சஞ் சலஞ்சொல்ல வேண்டுங்கொ லோவென தன்னை மொழி
தருஞ்சஞ் சலமுந் தனிவைத்துப் போனவர் சஞ்சலமும்
பெருஞ்சஞ் சலங்கொண்டு யானிருந் தேனொரு பெண்பிறந்தே. (2)

அழற்கட்டு கட்டிய வைவே லசதி யணிவரையின்
மழைக்கட்டு கட்டிய மாளிகை மேலொரு மங்கைநல்லாள்
உளக்கிட் டுரியிட்டு முவ்வுழக் கிட்டுரி நாழியிட்டு
குழற்கட் டவிழ்த்திட னங்கனனின் றேமயிர் கோதினளே. (3)

அலைகொண்ட வேற்கரத்தைவே லசதி யணிவரைமேல்
நிலைகொண்ட மங்கைதன் கொங்கைக்குத் தோற்றின நீரினங்கள்
குலையுண் டடியுண் டென்கையினி லெற்றுண்டு சூட்டுமுண்டு
விலையுண் டடியுண்டு கண்ணீர் ததும்பவும் வெட்டுண்டவே. (4)

அறங்காட் டியகரத்தைவே லசதியகன் சிலம்பின்
நிறங்காட்டுங் கஞ்சத்திருவனையீர் ! முகநீண்ட குமிழ்த்
திறங்காட்டும் வேலுஞ் சிலையுங் கொல்யானையுந் தேருங்கொண்டு
புறங்காட்ட வுந்தகு மோசிலைக் காமன்றன் பூசலிலே. (5)

ஆலவட் டப்பிறை வைவே லசதி யணிவரைமேல்
நீலவட் டக்கண்க ணோக்கும் போதந்த நேரிழையாள்
மாலைவிட் டுச்சுற்றி வட்டமிட் டோடி வரவழைத்து
வேலைவிட் டுக்குத்தி வெட்டுவளாகில் விலக்கரிதே. (6)

ஆய்ப்பாடி யாயர்த மைவே லசதி யணிவரையிற்
கோப்பா வவனெழிற் கொங்கைக்குத் தோற்றிபக் கோடிரண்டுஞ்
சீப்பாய்ச் சிணுக்கரியாய்ச் சிமிழாய்ச் சின்ன மோதிரமாய்
காப்பாய்ச் சதுரங்கமாய்ப் பல்லக்காகிக் கடைபட்டதே. (7)

ஆதித்தனைக்கண் டரவந்தொடவந் நகரினுள்ளார்
பாலித்த முத்தும் பவளத்தொட் டாலிந்தப் பைங்கொடியாள்
சேனைத் தலைவனைச் செங்கோ லசதியைச் சேர்ந்தொருநாள்
கூடித்தழுவு மென்றுதொட் டாடன் குவிமுலையே. (8)

ஆடுங் கடைமணியைவே லசதி யணிவரைமேல்
நீடுங் கயற்கண்ணி யாடந்த வாசை நிகழ்த்தரிதால்
கோடுங் குளமுங் குளத்தரு கேநிற்குங் குன்றுகளுங்
காடுஞ் செடியு மவனாகத் தோன்றுமென் கண்களுக்கே (9)

ஆராயிரங்கொண்ட வைவே லசதி யகன்கிரியில்
நீராடப்போகும் நெறிதனிலே யந்தி நேரத்திலே
சீரான குங்குமக் கொங்கையைக் காட்டிச் சிரித்தொருபெண்
போராளன் பிடிபிடி யென்றே நிலவும் புறப்பட்டதே. (10)

---

# கடல் கடைந்த காளையும், — — மலையசைத்த மன்னனும்

(ரா. பி. சேதுப் பிள்ளை, பி. ஏ., பி. எல்.)

இவ் வுலகில் மஞ்சு தோய உயர்ந்த மலையும், ஆழ்ந்து அகன்ற ஆழியும் பெருமை சான்ற பொருள்களென்று புலவர் போற்றுவர். இத்தகைய பெருமை வாய்ந்த மலையைப் பெயர்த்த மன்னனும், ஆழியைக் கடைந்து அமுதெடுத்த அரசனும் ஒரு காலத்தில் இந்நாட்டில் ஒருங்கே வாழ்ந்துவந்த வரலாற்றைச் சிறிது ஆராய்வாம்.

வானர நாட்டு அரசனாய், வலிமை சான்ற வாலி விளங்கினான். இலங்கை நாட்டின் வேந்தனாய் இராவண வீரன் இலங்கினான். இவ்விரு பெரு வேந்தரும் வரத்திலும் வலிமையிலும் தலை சிறந்தவராய், சிவ நெறியிற் பற்றுடைய சீலராய், ஒருவருக் கொருவர் உற்ற துணைவராய் அமைந்து வாழ்ந்தார்கள். இவ்விரு வேந்தரும், திருநெறித் தலைவராய திருஞான சம்பந்தப் பெரியாரால் போற்றிப் புகழப்பட்டவ ரெனில் அவரது பெருமைக்கு வேறு சான்றும் வேண்டுமோ? வளவன் நாட்டை வளம்படுத்தும் பொன்னியாற்றின் வடகரையில் அமைந்த குரங்காடு துறை யென்னும் திருநகரில் அமர்ந்தருளிய ஈசனை வழிபட்டு வரம்பெற்ற வாலியின் பெருமையை,

“கோலமா மலரொடு தூபமும் சாந்தமும் கொண்டு போற்றி
வாலியார் வழிபடப் பொருந்தினார் திருந்துமாங் கனிகளுந்தி
ஆலுமா காவிரி வடகரை யடை குரங் காடுதுறை
நீலமா மணிமிடற் றடிகளை நினையவல் வினைகள்வீடே.”

என்று தேவாரத் திருமுறையில் திருஞானக் கவிஞர் போற்றிப் புகழ்ந்தார். பிறப்பால் வானர மாயினும், செம்பொருள் காணும் சிறப்பால் மக்களிலும் மேம்பட்டு விளங்கிய சிவநேயச் செல்வனை “வாலியார்” என்று திருமுறைத் தலைவர் புகழ்ந்துரைத்த பான்மை அறிந்து மகிழத்தக்கதாகும். இவ்வாறே இலங்கை வேந்தனாய் இலங்கிய இராவணனும் கலைஞானக்கன்றாய கவிஞரால் பதிகந்தொறும் பாடும் பெருமை பெற்றவனே யாவன். அருமருந்தாய் அமைந்த திருநீற்றின் பெருமை கூறப்போந்த திருஞான சம்பந்தர் “மந்திரமாவது நீறு, வானவர் மேலது நீறு, எண்ணத்தகுவது நீறு” என்று தொடங்கிய முறையில் “இராவணன் மேலது நீறு, எண்ணத்தகுவது நீறு”

என்று போற்றுவராயின் இலங்கை வேந்தனது பெருமை அளவிடற் கெளிதாமோ? சிவனடி மறவாத செம்மை வாய்ந்த இலங்கை வேந்தனது மேனியிற் பொருந்திய வெண்ணீறு என்று திருநீற்றை வியந்து கூறும் கவிஞரது கருத்தை ஆராயும் பொழுது அம்மன்னனது பெருமை மாண்புற இலங்கக் காணலாம்.

இத்தகைய சைவ சமய சீலர் இருவரும், இருமையும் தரும் பெருமானாய இறைவனை வணங்கி அருமையான வரங்கள் பெற்று வாழ்ந்தார். பகைவராய் முன்னின்றோரது வலிமையிற் பாதியைத் தன்பால் இழுத்துக்கொள்ளும் தனி வரம் வாலிபால் அமைந்திருந்தது. எக்கோடியராலும் வெல்ல இயலாது முக்கோடி வாழ்நாளும் பெற்று, இராவணன் இறுமாந்திருந்தான். இவ்வாறு வரம் பெற்ற இலங்கை வேந்தன் வாலியின் வலியறியாது, அவ்வீரனை வெல்லக் கருதியபோது, அவன் வாலாற் கட்டுண்டு வருந்துவனாயினன். இருபது தோளமைந்த இராவண வேந்தனை, வாலினாற் பிணித்து வலியழித்த வாலியின் பெருமையை, திருஞான சம்பந்தர் கூறும் திறம் சால அழகியதாகும்.

"நீலமாமணி நிறத்தரக்கனை இருபது கரத்தோடு ஒல்க
வாலினாற் கட்டிய வாலியார் வழிபட மன்னுகோயில்."

என்று வடகுரங்காடு துறைப்பதிகம் வண்ணமாய் எடுத்துரைக்கின்றது. இவ்வாறு வாலியின் வலிமையை அறிந்த இலங்கை வேந்தன், அவ்வீரனது நேசத்தை விரும்பிப் பெற்று விருந்துண்டு மீண்டான். அப்பால் இருவரும் நேசம் என்னும் பாசத்தால் பிணிப்புற்று உயரிய நண்பராய் அமைந்தார்கள்.

இவ்வீரர் இருவரும் செயற்கரிய செயல்செய்து இவ்வுலகில் அழியாப் புகழ் பெற்றவராவர். அலை கடலைக் கடைந்து அமுதெடுக்கும் ஆற்றலின்றி, ஆசையால் உழன்ற வானவரும் தானவரும் மகிழுமாறு, தன் திண்ணிய கரங்களால் திரை கடல் கடைந்து தெள்ளமுதம் எடுத்து வழங்கிய வலிமையும் வண்மையும் வாலியார்க்கே உரியதாகும். அவ்வாறே கண்ணுதற் பெருமான் வீற்றிருக்கும் கயிலைமாமலை, தன் விமானத்தைத் தடுத்ததென்று வெகுண்டு, அம்மலையைப் பெயர்த்து அசைத்த பெருமை இராவணனார்க்கே உரியதாகும். ஆகவே கடலைக் கடைந்தும், கயிலை மலையைக் கையால் எடுத்தும், வலிமையின் வரம்பென விளங்கிய இருபெரு வேந்தரும் இவ்வுலகில் என்ஞான்றும் பொன்றாது நிற்பர் என்பதில் யாதும் ஐயமில்லை.

இல்லறம் என்னும் நல்லறத்தை மேற்கொண்டு வாழ்ந்த இவ்விரு பெரு வேந்தர்க்கும், கற்பினுக்கு அணியாய இரு பெண்மணிகள் மனைவியராய் அமைந்தார்கள். அருங்குணம் வாய்ந்த அமுத நங்கையாய தாரை வாலியின் வாழ்க்கைத் துணையாய் விளங்கினள். மாதர்க்கு அணியாய மண்டோதரி இராவணன் மனைவியாய் அமைந்தாள். இவ்வாறு குலத்திலும் நலத்திலும் மேம்பட்ட மனைவியரைத் துணைக்கொண்டு, மனையறம் புரியும் பெரு

மை இரு மன்னர்க்கும் வாய்த்தது. தலையாய கற்பமைந்த மண்டோதரியின் மாண்பினை வியந்தெழுதப் போந்த மணிவாசகப் பெருமான்,

"ஏர்தரும் ஏழுலகேத்த எவ்வுருவும் தன்னுருவாய்
ஆர்கலி சூழ் தென்னிலங்கை அழகமர் மண்டோதரிக்கு
பேரருள் இன்பமளித்த பெருந்துறை மேயபிரானை
சீரிய வாயாற் குயிலே தென் பாண்டிநாடானைக் கூவாய்."

என்ற மணி மொழிகளாற் கூறினர்.

இத்தகைய இணையற்ற மங்கையரை மனைவியராய்ப் பெற்றிருந்தும், முன் வினைப்பயனால் இரு வேந்தரும் பிறன் மனை நயந்து பிழையுற்றனர். வானர நாட்டு வீரனாய வாலி தம்பியின் மனைவியைக் கவர்ந்தான். இலங்கை வீரனாய இராவணன் அயோத்தி மன்னனது மனைவியைக் கவர்ந்தான். இக் குற்றம் ஒன்றே இருவர்க்கும் அற்றம் விளைத்தது. இதனால் அன்றோ,

"பிறன் மனை நயவாத பேராண்மை சான்றோர்க்கு
அறன் ஒன்றோ ஆன்ற ஒழுக்கு."

என்று பொதுமறை முறையிடுகின்றது !

பிறப்பிலும் ஏனைச் சிறப்பிலும் நிகரான வேந்தர் இருவரும் இறப்பிலும் ஒற்றுமை யுடையராய் அமைந்த முறை அறிந்து வியக்கத்தக்கதாகும். அறம் செய்த அறவினையாலும், மறம்செய்த மறவினையாலும், கோசல மன்னனது மைந்தனாய்த் தோன்றிய இராமனது கணையால் இரு வீரரும் இவ்வுலக வாழ்வை நீத்தனர். மும்மைசால் உலகுக்கெல்லாம் மூலப்பொருளாய மூர்த்தியே நேராக நின்று மெய்ப்பதம் வழங்கும் மேன்மை இருவீரர்க்கும் வாய்த்தது. அறந்தாறு அறிந்தும் அயலான் மனைவியைக் காதலித்த அரசர் இருவரையும் இறைவன் மறக் கருணையால் ஆண்டு மாறிலா இன்பத்தில் வாழவைத்தான். புலவர் பாடும் புகழமைந்த வானர வீரனும் இலங்கை வீரனும் இவ்வுலகில் வீரம் உள்ளளவும் சைவம் உள்ளளவும் அழியாது நின்று நிலவுவர் என்பதில் ஐயம் ஒன்று உண்டோ ?

## இளைஞன் அடங்கும் காலம்

"துள்ளிக் குதித்து யாருக்கும் அடங்காமல் ஆர்ப்பாட்டம் செய்யும் அப்பன் என் சொல்லைத்தான் கேட்டானா! அவன் தந்தை வார்த்தையைத்தான் மதித்தானா! அந்த மோகனாங்கி வந்தாள்; ஒவ்வொரு தரமும் ஒவ்வொரு திருப்புத் திருப்பினாள்; பையன் தானே பெட்டியில் பாம்புபோல் அடங்கிவிட்டான். "பெற்றோர் உற்றார் உறவினர் யாருக்கும் அடங்காத பேயனையும் அடக்கிவிடும் சாமர்த்தியம் அந்த ஒருத்திக்குத்தான் உண்டு" என்கிறாள் ஓர் கிழட்டுத்தாய்"

ஆசிரியர் சீடனுக்கு

# உபதேசிக்கும் முறைமை.

தமிழ்ப்பண்டிதர்-ஆ. கமலநாத முதலியார்.

வினா:—சுவாமிகளே! தாங்கள்,

"சீரொளியாகிச் சிற்சுகக் கடலாய்ச் சித்தசித் திரண்டற நின்ற
பாரொளியாகிப் பார்முதற்பூதப் பகுதியா முச்சுடர் களும்போய்
வரொளியாகி யெதிரிறந் தொன்று யேகமா யெல்லையொன் றில்லாப்
பேரொளியாகி யகண்ட பூரணமாய்ப் பேச்சிறந் திருப்பதே பிரமம்."

என்ற கொள்கையின்படி பிரமமாயிருக்கிற தங்களுக்குக் காலத் திரயத்திலேயும் சரீர மில்லை. தாங்கள் தற்பர விசும்பாயும், அளவில்லாச் சிற்சுடராயும், அலையிலாக் கடலாயும், நிரதிசய வடிவாயும், பகலிர வில்லாதவராயும்

"சிவந்தவிர் விறந்து செய்கைசெய் விக்கை சினம்பல கோடிக ளிறந்து
பவந்தவிர் விறந்து செகம்பிரித் தறிந்து பகலிரவென்பது மிறந்து
தவந்தவிர் விறந்து கவடற விறந்து தனிமையாய்த் தமம்சம மிறந்தே
அவந்தவிர் விறந்து நிரதிசை வடிவா யசஞ்சல மறிவதா னந்தம்"

என்னும் பெற்றிமைக் கேற்ப, ஆனந்தமயமாய் இருந்து விளங்குகின்றீர்கள். இங்ஙன மிருக்கும் தாங்களே திருவிளையாட்டினாலே ஆனந்தமயம் நீங்கிச் சாக்கிரத்தில் புருவ மத்தியில் நின்று இராஜயோலக்கம்போலச் சதுரங்க பலத்துடனே யிருந்து, சத்த, பரிச, ரூப, ரச கந்தத்துடனும், வசன, கமன, தான, விசர்க்கம், ஆனந்தமென்னும் இவைகளுடனும், மனம், புத்தி, சித்தம், அகங்காரம் இந்நாலுஞ் சேர்ந்த கருவிகளுடன் சந்நிதியில் சேவிக்கத் தான் பராசக்தி அருளாலே வியக்தனாய்ச் சுகதுக்கங்களை யறிந்து நின்றும், சொப்பனத்தில் கருவிகரணாதிகளோடு கண்டத்தின் கண்ணே நின்றும், சுழுத்தியில் சீவாத்மாவைக் கூடிச் சுவாசய இருதயத்திலே நின்றபோது கண்டவை கேட்டவை யொன்றும் பிறர்க்குச் சொல்லப்படாத நிலைமையின் கண்ணே நின்றும், துரியத்தில் சுழுத்தியை விட்டுக் கரண மொன்றுடனே சீவாத்மா நாபித்தானத்தில் நின்றபோது உச்சுவாசம் நிச்சுவாசங்களைப் பிறப்பித்து நின்றும், சாக்கிர ஆகாரமும் சொப்பன வறிவும் சுழுத்தி மயக்கத்துவமும் மூன்றும் கெட்டுத் தானாய் விளங்குகிறீர்கள். தங்களுக்குச் சங்கற்ப விகற்பத்துவம் விட்டுப்போனபடியினாலே ஸ்தூலமான நினைவும், சூட்சுமமான கனவும், காரணமான அறியாமையும் விட்டுப்போய்ச் சமாதியிலிருந்து,

"சுட்டுதலறவே துரியமுங் கடந்து சூனியா சூனியந் தனிலே
எட்டுதலறவே ஏகாமா யொன்று யெங்கணு மகண்ட பேரறிவாய்க்
கட்டுதலறவே கரிவடி வமும்போய்க் ககனமொத் தசஞ்சல னாமாய்த்
தட்டுதலறவே தனையுணர் வதும்போய்த்தா னிறந் திருப்பதே சமாதி"

என்று திருவாய் மலர்ந்தருளியபடியே விளங்குகின்றீர்கள்.

அறிவே அறியாமை அறிவிற்கே அறியாமை உண்டு, தங்களுக் கில்லையே'.

மத்தியில் சித்து விளங்கினால் இறந்தகால அறியாமையும் எதிர்கால விஷயமும் இல்லாமல் நிகழ்காலத்தில் பூரணமாய் மூன்று காலமுந்தானாய் விளங்குகிற தங்களுக்கு என்ன குறை இருக்கப்போகிறது?

கண்ணாடியில் கண்ட பிம்பம் சுபாவ முகத்தைக் காட்டுவதுபோல சூட்சும சரீரத்தில் பிம்பித்த பிம்ப வியஞ்சகம் ஓங்கிய சைதன்னியத்தை விளக்குகையால் சூட்சும சரீரமில்லாத தரிசன துரியமாய் விளங்காநின்ற தங்களுக்கு என்ன குறை யிருக்கப்போகிறது? மத்திய கதத்தில் குருவடிவே பிரத்தியட்சமாய்ப் பூரணம் தானாக விளங்குகிறீர்கள். இகத்தில் பிரத்தியட்சம் வரும்போதும் தாங்கள் பூரணம். அகத்தில் பிரத்தியட்சம் வரும்போதும் தாங்கள் பூரணம். எந்தெந்தப் பிரத்தியட்சம் வரும்போதும் தாங்கள் பூரணமாய் உதயாஸ்தமனமில்லாமல் அறிவு அறியாமைகள் இல்லாமல் சொச்சமாய் விளங்குகிறீர்கள். தாங்களே ஜெகத்தாய் ஜெகததே தாங்களாய் விளங்குகிற தங்களுக்கு ஒரு குறைவுமில்லை. சொச்சமாய் விளங்குகிறீர்கள். எங்கே பார்த்தாலும் தான் தான் என்பது எப்படி யென்னில், விஷய கேவலத்திலும் தான் தான். சொரூப கேவலத்திலும் தான் தான். நடுவே விளங்கினாலுந் தான் தான். இதற்கு விஷய கேவலம் வெளியில், ஸ்புரிப்பு உள்ளே, சொரூப கேவலம் மத்தியிலென வறிக.

வினா:—பூரண விருத்தியாவது எப்படி?

விடை:—தானா யிருக்கிற பூரணத்தை விளக்கமாகும்படி அங்கங்கே தன்னைக் காண்கிறதே பூரண விருத்தியென வறிக.

வினா:—தான் இருப்பது எப்படி?

விடை:—சுழுத்தியில் சித்துத் தானாயிருப்பது. சுகத்திலும் சித்திலும் சத்துத் தானா யிருப்பது எனவறிக.

வினா:—அறிவு திசை, அனுபூதி திசை எப்படி?

அனுபூதி திசை போதம் இல்லை. பகுக்கும், அறியும். ஆனால் பகுத்ததில்லை, அறிந்ததில்லை.

வினா:—ஈஸ்வர திசை யெது?

போதத்தோடு கூடி யிருக்கிறதே ஈஸ்வர திசையென வறிக.

வினா:—விளக்கமும் மாயையும் எது?

இருக்கிறது அறிய வந்ததென்றால் விளக்கம். அறிந்ததென்றால் அறிகிறதும் இல்லை, அறியவில்லை யென்று ஒருபயமு மில்லை. நான் அறிந்தேனென்றால் மாயையாயிற்றென வறிக.

வினா:—அது அதுவாய்க் கெட்டுப் போகத் தான் தானாய் விளங்குவது எப்படி?

பரப்பிரகாச மனோவிருத்திப் பகுப்புடனே கெட்டது. தன் பிரகாசமும் தானும் ஒன்றாய் விளங்கிப் போயிற்றென வறிக.

வினா:—சிருஷ்டி லயம் எப்படி?

தான் விளங்கினால் செகம் இல்லை. லயம் விருத்தியானால் சிருஷ்டியான சகம் உண்டென வறிக.

வினா:—தன்னை விசாரிக்கவந்தது எது?

பாவம் வந்தது. தன்னை விசாரிக்க வந்ததேயல்லாமல் பிரபஞ்சமாய்ப் போகவந்ததல்லவெனவறிக. தானாயிருந்தது அறியவந்தது.

வினு:—தானு யிருந்தாலும் தானாகவே யிருந்து அறியவந்தாலும் தான் தான் என்பது எப்படி?

இது வரைக்கும் தேகம் தெரியாது தானுயிருந்தது. இப்போது தெரிகிறதென்றால் தெருவில் தானில்லாவிட்டாலும் தெரியுமா தெரியாது. தானுயிருந்தாலும் தான் தான் அறிந்தாலும் தன்னைத் தான் அறிகிற தென வறிக.

வினு:—உண்மை நிட்டையாவதெது ?

தோன்றிக்கொண்டிருக்கும்போது தானே தோன்றாமலிருக்கவேணும்.

வினு:—அது எப்படி ?

ஞானம் விளக்கமாகாமுன் அனுபூதி தோன்றாமலே தானாக விருப்பது. அனுபூதி விளக்கமாகவும் அனுபூதியே தானு யிருத்தலு முண்டென வறிக.

வினு:—அனந்தானந்தங்களும் ஒன்றென்ப தெப்படி ?

பிரம்மா முதல் பிபீலிகாதி பரியந்தம் விருத்தாமிசம் அனந்தம். அமிர்தாம்சம் ஒரே பிரகாசமான வேகமென வறிக.

வினு:—தான் விளங்குவ தெப்படி ?

ஒரு பதார்த்தத்தினிடத்தில் விருப்பும் வெறுப்பும் அற்றவர்களா யிருக்கிற சகச ஞானிகள் எக்காலத்திலும் தன்னையே கண்டுகொண் டிருப்பார்கள்.

தருமக் கடலே குருபரனே சாற்றும் சதுர்மா மறைப்பொருளே
உருவா யருவா யருவுருவா யோங்கு முறையான் சிறியோனே
விருப்பு வெறுப்பு மற்றவர்கள் வேண்டும் பரமானந்த சுகம்
விரும்பிக் கமல நாதனெனும் வீண னலைந்தாற் றாராயோ.

வினு:—தன்னை யறிந்தாரின் தன்மை யெவ்வா றிருக்கும் ?

பாலை நிலம் நெய்தலாகப் பாடுவதும், மரித்தவன் பிராணன் பெற்றெழுந்திருக்கும்படி பாடுவதும், காலனை யேவி முதலை பிடித்து மரித்த புதல்வனை அழைப்பிப்பதுமாகிய பதியின் செய்கையைப் பெற்றிருப்பார்கள்.

வினு:—தானு யிருப்பது ஜெகமாய்ப்போவது எப்படி ?

தான் விளங்கினுல் சிருஷ்டி யில்லை. தான் விளங்காமல் விருத்தியாய்ப் போமானுல் சிருஷ்டியுண்டென வறிக.

வினு:—உள்ளேயும் வெளியிலேயும் மத்தியிலேயும் அனுபவம் எப்படி?

உள்ளே விளக்கமுந் தானுயிருப்பது ; எல்லாவற் றுள்ளும் வியாபக விளக்கந் தானு யிருப்பது; மத்தியிலேயும் தானு யிருக்கிறதென வறிக.

வினு:—எல்லாவற் றுள்ளும் தான் விளங்குவ தெப்படி ?

அஞ்ஞானமானுல் எதிர்ப்பட்டது ஆகாரம். நடுவே ஆகாரம் தானுயிருக்கும் கருத்து. அறிவானுல் எதிர்ப்பட்டதும் அறிவு. நடுவே அறிவு தானு

யிருக்கும் கருத்து. ஆகலாதமானால் எதிர்ப்பட்டதும் ஆகலாதம். நடுவே ஆக லாதம் தானாயிருக்கும். விளக்கமானால் எதிர்ப்பட்டதும் விளக்கம். நடுவே விளக்கம் தானா யிருக்கும். தானானால் எதிர்ப்பட்டதும் தானா யிருக்கும். நடு வேயும் தானா யிருக்குமென வறிக.

வினா:—விசேடமும் அன்னியமு மாவதெது?

அதிட்டானத்தில் அப்போது ஆதாரத்துத் தடைவிட்டது. அப்போது அதிட்டான மில்லையென வறிக.

வினா:—சாமானியமும் விசேஷமும் விளங்குவ தெப்படி?

விசேஷத்தில் சாமானியம் விளங்கினால் விசேஷமில்லை. விசேஷத்தில் சாமானியந் தானாக விருக்கிறதென்று போதம் வரலாகாது. போதம் வந்தால் தான்தான் விளங்கும். போதத்தில் தான்தான் விளங்குகிறபடியினாலே போதம் இல்லையென வறிக.

வினா:—விருத்தத்துக்கு மத்திய கெத மெது?

உள்ளே அறிவிக்கும். வெளியில் ஆகாரத்துக்கும் மத்தியகெதம் ஆகலாத மென வறிக.

வினா:—அவிருத்தத்துக்கு மத்திய கெத மெது?

உள்ளே விளக்கத்துக்கும் வெளியே ஆகலாதத்துக்கும் மத்தியகெதம் நடுவனைத் தானென வறிக.

தானே தானா யிருக்கத் தன் வியாபகம் தானாயிருக்கச் சேதன வியாபாரம் தானாய் இருக்கும். பலவாய் வியாபகத்தைப் பார்க்கும்போது ஆகலாதம் விசேஷத்தில் விளங்கும். பாராவிடில் தானா யிருக்கும் ஆத்மா வென வறிக.

வினா:—அசைவாவ தெது?

விடை:—பூரணமென வறிக.

வினா:—தீர்வையான தெது?

விடை:—அறியவில்லை யென்றும் அறிந்தோமென்றும் வரப்போகா தென வறிக.

வினா:—வேத்திய மாவதெது?

விடை:—அனுபூதி விளைந்தால் அறிவு தானாய்ப்போம்.

அறிவும் ஆனந்தமுமே சாஸ்திரங்கள் தோறும் விளங்குவது. ஏகதேச மாய் விளங்கா நின்ற சாம்பிரதாயத்தில்தான் விளங்குமென வறிக.

வினா:—பாவனை முதிர்ந்தவர்களின் நிலை எப்படி யிருக்கும்?

கண்ணாடியிலே தோன்றின பட்டணம்போலச் சச்சிதானந்தத்திலே சகங்காணும்.

வினா:—பிறப்பிறப்பு எவர்க்கு நீங்கும்?

அவிச்சையி னீங்கி மெய்யுணர் வுடையராயினார்க்கு அம்மெய்யுணர்வு பிறப்பினை நீக்கி வீட்டின்பங் கொடுக்கும்.

வினா:—எவர்க்குப் பிறவித் துன்பங்கள் நீங்கா?

இருவகைப் பற்றினையும் இறுகப் பற்றிவிடாதாரைப் பிறவித் துன்பங் கள் இறுகப் பற்றி விடா.

வி:—சுத்தமாவது எப்படி?

அறிவறியாமை இல்லாதது சுத்தம்.

வி:—அதெப்படி?

அறியாமையா யிருந்தால் அசத்துச்சடமா யிருக்கவேணும். அசத்தாகிய விவகார யிருக்கிறது. அறிவா யிருக்கிறதே சுத்தம்.

அறிவா யிருந்தும், அறிவா யிருக்கிறேமென்று பேதமில்லை. அறிவறியாமையா யிருந்தும் சுத்தமா யிருக்குமென வறிக.

வி:—அனேகமாவதும் ஏகமாவதும் எப்படி?

மத்தியந்தான் விளங்கிலுல் அனேக மில்லை. ஒன்றை யொன்று அடக்கிக் கொடுக்கிற மாயை விளங்கினுல் அனேகமாமென வறிக.

வி:—ஈசுவர துரியமும் சீவ துரியமும் எப்படி?

அனேகத்தில் அனுபூதி யொன்று யிருக்கிறது. ஈசன் ஒன்றான அனுபூதியைப் பலமாய்க் காண்கிறவன். சீவன் அறிவனுபூதி. சீவ துரியன் அனுபூதி. அறிவு ஈச துரியமென வறிக.

பத்தர் முத்தர் முன்னோர் பரவு முமையாள் திருமகனே
சித்த முருகத் திரிகரணந் தானுமுருகச் சேர்ந்தமனம்
நித்தமுருக நிமலனருள் நேயமுரு காவென் றுனையே
கத்தும்பரிசு தந்திடுவாய் கருணை நிதியே காங்கெயனே.

## ஜீவிய சந்தாதாரர்.

நமது "ஆனந்தபோதினி" மாத சஞ்சிகைக்கு இவ்வாண்டு ஆடி மீ முதல் திருவிதாங்கூரைச் சேர்ந்த தித்திவளை-திருவாளர், ஆர். ஸ்தாணு சுப்பிரமணிய ஐயர் அவர்கள் (சந்தா நெ. 53) ஜீவிய சந்தாதாரர்களில் ஒருவராகச் சேர்ந்து பத்திரிகையை ஆதரித்து வருவதற்கு எமது அன்பு நிறைந்த நன்றியறிதலைத் தெரிவித்துக்கொள்ளுகிறோம். திரு ஐயரவர்கள் எல்லாச் செல்வமும் பெற்று பல்லாண்டு வாழுமாறு திருவருளை வழுத்துகின்றோம். ஏனைய அன்பர்களும் ஜீவிய சந்தாதாரர்களாகச் சேர்ந்து நமது "போதினி"யை ஆதரிப்பார்களாக.

பத்திராதிபர்.

# தமிழ்மொழியின் பெருமை

(o)

(பொ. திருகூடசுந்தரம் பிள்ளை, எம். ஏ., பி. எல்.)

"வாழ்க தமிழ்மொழி வாழ்க தமிழ்மொழி வாழ்க தமிழ் மொழியே
வாழ்க நிரந்தரம் வாழ்க தமிழ்மொழி வாழிய வாழியவே."

உலகில் உள்ள தேசங்கள் பல; அவைகளில் வாழ்ந்துவரும் ஜனசமூகங்களும் அவை பயிலும் பாஷைகளும் பலவாகும். ஒவ்வொரு ஜாதியாரும் தங்கள் தங்கள் தாய்மொழியினிடம் பேரன்புகொண்டு போற்றிப் புகழ்ந்து கண்ணும் கருத்துமாய் வளர்த்து அபிவிருத்தி செய்து வருகின்றனர். அங்ஙனம் அன்னை மொழியின்பால் அளவிறந்த அன்பு பூண்டொழுகும் ஜாதியாரில் தமிழரும் ஒருவராவர். அவர்கள் தங்கள் தாய்மொழியாகிய தமிழ் மொழியின் பெருமைகளை எடுத்துப் புகழ்ந்தோதுவதில் ஒருநாளும் சலிப்படைவதிலர். தமிழின் மாண்பைப் பேசுவதில் அவர்கள் அடையும் ஆனந்தத்திற்கு அளவு கிடையாது. தமிழ்நாட்டில் எத்தனையோ தமிழ்ப் பத்திரிகைகள் நடந்துவருகின்றன. அவைகளில் தமிழ்ப் பாஷையின் மேன்மையைப் பற்றிய வியாசங்கள் வாரந்தோறும் ஒன்று வீதமாவது வெளிவரத் தவறுவதில்லை. தமிழ்நாட்டில் ஏற்பட்டுள்ள சங்கங்களும் பலவாகும். அவைகள் ஒழுங்காக அடிக்கடி கூட்டம் கூடுவதாகமட்டும் இருக்குமானால் அவ்விதம் கூட்டப்படும் கூட்டங்களில் ஐந்தாறு சமயங்களிலாவது தமிழ்மொழியின் பெருமை பேசப்படாதிராது. அச்சங்கங்கள் அடிக்கடி கூடினாலும் கூடாவிட்டாலும் ஆண்டுதோறும் ஆண்டு நிறைவுவிழா நடத்துவது மட்டும் நிச்சயம். அவ்வாண்டு விழாக்கள் நடக்கும் காலத்தில் நடைபெறும் பல பிரசங்களில் ஒன்றாவது தமிழ்ப்பாஷையின் சிறப்பைப் பற்றியதாகவே யிருக்கும். இவ்விதம் நடைபெறும் சபைகள் தமிழ்மொழியின் வளர்ச்சிக்கென்று தனியே ஏற்பட்டவைகளாய் இருக்கவேண்டுமென்ற அவசியமில்லை.

## சில வினாக்கள்

இங்ஙனம் வரையப்படும் வியாசங்கள், நிகழ்த்தப்படும் சொற்பொழிவுகள் எல்லாம் எடுத்தியம்பும் முடிவு யாதெனில் சகல பாஷைகளிலும் தமிழ்மொழியே தலைசிறந்தது என்பதே. இம்முடிவைப் பற்றிச் சிந்திக்கப் புகுந்தால் கீழ்க்கண்டவாறு பல வினாக்கள் மனதில் உதித்தல் சகஜம். தமிழர்கள் கூறுவதுபோல் தமிழ்மொழி உண்மையில் சிறப்புடையதுதானா? அவர்கள் கூறும் அபிப்பிராயம் சரியா? அது எல்லோராலும் ஒப்புக்கொள்ளக் கூடியதா? அவ்வபிப்பிராயத்திற்கு ஆதாரம் என்ன? அவர்கள் தங்கள் தாய் மொழியே தலைசிறந்தது என்று கூறுவதற்குரிய காரணங்கள் யாவை? வேறு பாஷைகளிடம் காணப்படாது தமிழ்ப்பாஷையினிடம் மட்டுமே

காணப்படுவதாகக் கூறும் விசேஷச் சிறப்புக்கள் எவை? அவை தமிழ்மொழியின் பெருமையை ஸ்தாபிக்கப் போதுமான காரணங்கள் ஆகுமா? ஒரு பாஷையின் மேன்மையைக் காட்டக் கூடிய—தமிழர் எடுத்துக் கூறாத வேறு விசேஷ குணங்கள் உண்டா? அவை தமிழ்ப்பாஷையினிடம் காணப்படுகின்றனவா? காணப்பட்டால் அவைகளை மேன்மேலும் அதிகமாக அபிவிருத்தி செய்வதெப்படி? காணப்படாவிட்டால் அவைகளை ஏற்படும்படி செய்யக் கூடிய வழி யாது? தமிழர் தங்கள் தாய்மொழியின் சிறப்பை அயல் நாட்டாருக்குக் கூறாமல் தங்களுக்குள்ளாகவே அடிக்கடி கூறிக்கொள்வதன் நோக்கம் என்ன? அவ்விதம் செய்வதால் அவர்கள் நாட்டில் ஏற்படுத்த விரும்பும் நன்மை யாது? அவர்கள் விரும்புவதுபோல் நன்மை ஏற்பட்டிருக்கின்றதா? ஏற்படாவிட்டால் அதற்கு என்ன காரணம்? ஏற்படும்படி எவ்விதம் செய்யலாம்? இவ்விஷயங்கள் சம்பந்தமாய்ச் சிந்திக்கவேண்டியதும் அறிய வேண்டியதும் தமிழன் ஒவ்வொருவனுடைய கடமையுமாகும்.

## கூறும் காரணங்கள்

தமிழ்ப் புலவர்கள் தங்கள் தாய்மொழியின் பெருமைக்குக் கூறும் காரணங்கள் பல. அவற்றை இரண்டு வகையாகப் பிரிக்கலாம். புராண சம்பந்தமான காரணங்கள் ஒருவகை. மற்றோர் வகை சரித்திர சம்மதமான காரணங்களாகும். ஆதிநாள் முதல் ஐம்பது அறுபது வருஷங்களுக்கு முன்வரை கூறப்பட்டு வந்தவை புராண சம்பந்தமான காரணங்களே. சென்ற 50, 60 வருஷங்களாகத்தான் இக்காரணங்களோடு சரித்திர சம்மதமான காரணங்களும் கூறப்பட்டுவருகின்றன. இவ்விரண்டு விதமான காரணங்களையும் தனித்தனியே ஆராய்வோம். ஆராய்ந்து அவை அவை தமிழ்மொழியின் மாண்பை ஸ்தாபிக்கப் போதுமான வண்மை பொருந்தியவைதானா என்ற விஷயத்தை முடிவு செய்வோம்.

## புராணக் காரணங்கள்

ஆதிநாள் முதல் தமிழர்கள் அநேகமாகச் சைவமதத்தைச் சார்ந்தவர்கள் ஆகியபடியால் தங்கள் தாய்மொழியாகிய தமிழ்மொழி சிவபெருமானாலேயே சிருஷ்டிக்கப்பட்டது என்று கூறி வருகின்றனர்.

வடமொழியைப் பாணினிக்கு வகுத்தருளி அதற்கிணையாத்
தொடர்புடைய தென்மொழியை யுலகமெலாந் தொழுதேத்தும்
குடமுனிக்கு வலியுறுத்தார் கொல்லேற்றுப் பாகரெனில்
கடல்வரைப்பின் இதன்பெருமை யாவரே கணித்தறிவார்.

***

மறைமுதற் கிளந்தவாயான் மதிமுகிழ் முடித்தவேணி
இறைவர்தம் பெயரைநாட்டி யிலக்கணஞ் செய்யப்பெற்றே
யறைகடல் வரைப்பிற்பாடை யனைத்தும் வென்றாரியத்தோடு
உறழ்தரு தமிழ்த்தெய் வத்தை யுண்ணினைந் தேத்தல் செய்வாம்

***

விடையுகத்தவன் பாணினிக்கு இலக்கணம் மேனாள்
வடமொழிக் குரைத்தாங்கியன் மலய மாமுனிக்குத்
திடமுறுத்தியம் மொழிக் கெதிராக்கிய தென்சொல்.

சிவபெருமான் தமிழ்மொழியைச் சிருஷ்டித்ததோடு அமையாமல் அதைப் பிறர்க்குக் கற்பிக்கும் ஆசிரியராகவும், அதன் இலக்கண இலக்கியங்களின்

குணதோஷங்களை ஆராய்ந்தறியும் சங்கப்புலவர்களில் ஒருவராகவும் விளங்கினர் என்பதும் தமிழர் தங்கள் பாஷை சம்பந்தமாய்க் கூறும் பெருமைகளில் ஒன்று.

இருமொழிக்குங் கண்ணுதலார் முதற்குரவ ரியல்வாய்ப்ப
இருமொழியும் வழிப்படுத்தார் முனிவேந்தர் இசைபரப்பும்
இருமொழியு மான்றவரே தழீஇயினா ரென்றாலிவ்
விருமொழியு நிகரென்னு மிதற்கைய முளதேயோ.

***

கண்ணுதற் பெருங்கடவுளுங் கழகமோ டமர்ந்து
பண்ணுறத் தெரிந்தாய்ந்தவிப் பசுந்த மிழேனை
மண்ணிடைச் சிலவிலக்கண வரம்பிலா மொழிபோல்
எண்ணிடைப் படக்கிடந்ததா வெண்ணவும் படுமோ.

சிவபெருமான் தமிழ்ப் பெருங் கவிஞராகவும் விளங்கினர் என்றும் கூறுவர். அதற்குச் சான்றாகச் சேக்கிழார் பெரிய புராணம் செய்யத் தொடங்குகையில்,

உலகெலா முணர்ந்தோதற் கரியவன்
நிலவுலாவிய நீர்மலி வேணியன்
அலகில் சோதியன் அம்பலத் தாடுவான்
மலர் சிலம்படி வாழ்த்தி வணங்குவாம்

என்னும் முதற் செய்யுளைச் சிவபெருமானே திருவாய் மலர்ந்தருளியதாக எடுத்துரைப்பர். மற்றோர் சான்று வறுமை நோயுற்று வருந்திய தருமி என்னும் சிவனடியார்க்குப் பொற்கிழி தேடித்தரும் பொருட்டுச் சிவபெருமான் செய்து தந்ததாகக் கூறப்படும்,

கொங்குதேர் வாழ்க்கை யஞ் சிறைத்தும்பி
காமஞ் செப்பாது கண்டது மொழிமோ
பயிலியது கெழீஇய நட்பின் மயிலியற்
செறியெயிற் றரிவை கூந்தலி னறியவு
முளவோ நீயறியும் பூவே

என்னும் செய்யுளாகும். பாணபத்திரனுக்குப் பணம் கொடுத்தனுப்பும்படி பரமசிவன் சேரமானுக்குச் செய்தியனுப்பிய திருவோலைச் செய்யுளாகிய,

மதிமலி புரிசை மாடக் கூடற்
பதிமிசை நிலவும் பானிற வரிச்சிற
கன்னம் பயில்பொழி லாலவாயின்
மன்னிய சிவன்யான் மொழிதரு மாற்றம்
பருவக் கொண்மூப் படியெனப் பாவலர்க்
குரிமையி னுரிமையி னுதவி யொளிதிகழ்
குருமா மதிபுரை குலவிய குடைக்கீழ்ச்
செருமா வுகைக்குஞ் சேரலன் காண்க
பண்பா லியாழ்பயில் பாண பத்திரன்
றன்போ லென்பா லன்பன் றன்பாற்
காண்பது கருதிப் போந்தனன்
மாண்பொருள் கொடுத்து வரவிடுப் பதுவே.

என்பதையும் கவனிக்க. இலக்கண நூல்களில் சிறந்த இறையனார் அகப்

பொருள் சிவபெருமானால் இயற்றப்பட்டதென்பதும் வீரசோழியத்தைச் செய்தவர் வேல்முருகனே என்பதும் தமிழர் கொள்கை.

சிவபெருமானுக்குத் தமிழ் மொழியிலும் தமிழ்க் கவியிலும் மிக்க அன்பு உண்டு என்றும் அதுகாரணமாக அருந்தமிழ்ப் பாவலர் பலர்க்குப் பலசமயங்களில் பேருதவி செய்திருக்கின்றனர் என்றும் கூறப்படும் திருவிளையாடற் புராணத்தில்,

கடுக்கவின் பெறுகண்டனுந் தென்றிசை நோக்கி
யடுக்கவந்து வந்தாலொ ருடலி னிளைப்பு
விடுக்க வாரமென்காறிரு முகத்திடை வீசி
மடுக்கவுந் தமிழ் திருச்செவி மாந்தவுமன்றோ

என்று பரஞ்சோதி முனிவர் பாடியுள்ளதை நோக்குக. தற்காலத்தில் தமிழ்ப்புலமையில் தலைசிறந்து விளங்கிய மனோன்மணீய ஆசிரியர் சுந்தரம் பிள்ளையும்,

கடையூழி வரும்தனிமை கழிக்கவன்றோ அம்பலத்துள்
உடையார் உன்வாசகத்தில் ஒருபிரதி கருதினதே

என்று செந்தமிழ்க் கவி செய்துள்ளார்.

"பாடும் புலவர்க்கு அருளும் பொருளாவான்" சிவபெருமான் என்று சுந்தரர் பாடியதின் உண்மையை, இடைக்காடர்,

தமிழறியும் பெருமானே தன்னைச் சேர்ந்தார்
நன்னிதியே திருவால வாயுடை நாயகனே

என்று பாடியவுடன் அவருக்கும் பாண்டியனுக்கும் ஏற்பட்டிருந்த பிணக்கைத் தீர்த்து வைத்ததாகக் கூறும் திருவிளையாடற் புராணக் கதையைக் கொண்டு அறிந்துகொள்ளலா மென்பர்.

சிவபெருமானுக்கு இருந்தது போலவே மகாவிஷ்ணுவுக்கும் தமிழினிடம் பேரன்பு இருந்து விளங்கியதாகக் கதை கூறப்படும். கணிகண்ணனுக்காகத் திருமழிசை ஆழ்வாரின் வேண்டுகோளுக்கு இணங்கிக் காமரு பூங்கச்சி மணிவண்ணன் தன் பைந்நாகப்பாயைச் சுருட்டிக்கொண்ட வரலாற்றைக் கவனிக்க. இந்தச் சம்பவத்தையே குமரகுருபரரும்,

பழமறைகள் முறையிடப் பைந்தமிழ்ப் பின்சென்ற
பச்சைப் பசுங் கொண்டலே

என்று குறிப்பிடுகின்றார்.

சிவபெருமானுக்குத் தமிழ் மொழியின்பாலுள்ள அன்பால் அதைப் பாடும் பெரியோரின் வேண்டுகோளுக் கிணங்கி இயற்கைக்கு மாறான பல அற்புதக் காரியங்கள் செய்தருளிய கதைகளையும் தமிழின் பெருமைக்கு ஒரு முக்கிய சான்றாகக் கூறிக்கொள்வர்.

பொருப்பிலே பிறந்து தென்னன் புகழிலே கிடந்து சங்கத்
திருப்பிலே இருந்து வைகை ஏட்டிலே தவழ்ந்தபேதை
நெருப்பிலே நின்று கற்றோர் நினைவிலே நடந்தோரேன்
மருப்பிலே பயின்ற பாவை மருங்கிலே வளருகின்றாள்.

[வரந்தருவார்]

தொண்டர்நாதனைத் தூதிடை விடுத்துமுதலை
  யுண்டபாலனை யழைத்ததுமெலும் புபெண்ணுருவாக்
கண்டதும் மறைக்கதவினைத் திறந்ததுங் கன்னித்
  தண்டமிழ்ச் சொலோ மறுபுலச் சொற்களோ சாற்றீர்
[பரஞ்சோதி முனிவர்]

***

யாரறிவார் தமிழருமை என்கின்றேனென்
  அறியாமையன்றோ? மதுரை மூதூர்
நீரறியும் நெருப்பறியும் அறிவுண்டாக்கி
  நீயறிவித்தா லறியும் நிலமுந்தானே
[மதுரைப் பதிற்றுப் பத்தந்தாதி]

***

அங்ஙனம் ஆக்கப்பட்டதாக அறையப்படும் அற்புதங்கள் பலவாகும். அவற்றில் உதாரணமாகச் சிலவற்றை மட்டுமே உரைக்கின்றேன்.

ஞானசம்பந்தர் சமணர்களை வென்று சைவசமயத்தைப் பரப்பும் பொருட்டு மதுரைமாநகர்க்கு வந்து தங்கியவுடன் சமணர்கள் பாண்டியன் அனுமதிபெற்றுச் சம்பந்தர் தங்கிய மடத்திற்கு இரவில் தீவைத்தனர். அஃதறிந்த ஆளுடைய பிள்ளையார் அரசன் ஏவலால் அக்கினிவைக்கப் பட்டதால்,

செய்யனே திருவாலவாய் மேவிய
  ஐயனே யஞ்சலென்றருள் செய்யெனைப்
பொய்யரா மமணர் கொளுவுஞ்சுடர்
  பையவே சென்று பாண்டியற் காகவே

என்று "வெப்பந் தென்னவன் மேலுற"ப் பாடினார். உடனே வெப்பம் பாண்டியனிடம் விளைந்து வருத்திற்று என்பது புராணம். பின்னர் திரு நீற்றுப் பதிகம்பாடி பாண்டியன் உடலில் விபூதிபூசி அவனுடலுற்ற தீப்பிணி யாயின தீர்த்தருளினராம்.

சம்பந்தர் சமணர்களோடு அனல்வாதம் செய்தபொழுது தீயிலிட்ட [ஏட்டில்
போகமார்த்த பூண்முலையாடன்னோடும் பொன்னகலம்
பாகமார்த்த பைங்கண் வெள்ளேற்றண்ணல் பரமேட்டி
ஆகமார்த்த தோலுடையான் கோவண வாடையின்மேல்
நாகமார்த்த நம்பெருமான் மேயது நள்ளாறே

என்னும் தமிழ்ப் பாசுரம் எழுதப்பட்டிருந்தது. அவ்வேடு அக்கினியால் தகிக்கப்படாமல் தண்ணென்று பச்சையாய் விளங்கிற்று. இது தமிழ்க் கவிகளை எரியினிலிடினும் பழுதிலை மெய்ம்மையே என்பதைக் காட்டுமாம்.

அதன்பின் அவர் ஓர் ஏட்டில் கீழ்க்கண்ட பாசுரத்தை எழுதி வைகை நதியில் இட்டார்.

வாழ்க அந்தணர் வானவரானினம்
வீழ்க தண்புனல் வேந்தனுமோங்குக
ஆழ்க தீயதெல்லா மரனாமமே
சூழ்க வையகமுந் துயர்தீர்கவே

இட்ட ஏடு மிக விரைவாய் நதியில் நீரோட்டத்திற்கு நேர் விரோதமாய்

எதிர்த்துச் சென்றதாம். வேந்தனும் ஒங்குக என்றதனால் பாண்டியன் கூனும் நிமிர்ந்ததாம். நதியில் இட்ட எட்டை மந்திரி குதிரை எறிச் சென்றும் எட்டிப் பிடிக்கமுடியவில்லை. அதனால் சம்பந்தர் "வள்ளியு மத்தமும்" என்னும் பாடலைப்பாடியே எட்டை நிற்கச்செய்ய வேண்டியதாயிற்றாம்.

சம்பந்தரைப் போலவே நாவுக்கரசரும் தமிழ்க் கவிகளைக்கொண்டு பல அற்புதங்களை நிகழ்த்தியுள்ளதாகப் புராணம் கூறுகின்றது. அவரைக் கல்லோடு கட்டிக் கடலில் இட்டபொழுது,

கற்றுணைப் பூட்டியோர் கடலிற் பாய்ச்சினும்
நற்றுணையாவது நமச்சிவாயவே

என்று பாடினார். உடனே கல்தெப்பமாக மிதந்து அவரைக் கரைக்குக் கொண்டுவந்து சேர்த்துவிட்டதாம்.

அவரைச் சமணவேந்தன் நீற்றறையில் வைத்தபொழுது "மாசில் வீணையும்" என்னும் பதிகம்பாடி நீற்றறையைப் பொய்கைபோல் குளிர்வித்துக் கொண்டாராம். விஷத்தால் மாண்ட அப்பூதியடிகள் மகனை அப்பர் சுவாமிகள் "ஒன்றுகொலாம்" என்னும் பதிகம்பாடி விஷந்தீர்த்து உயிர் கொடுத்ததும் ஓர் அற்புதம்.

இதுபோலவே சுந்தரரும் பாடல்கள்பாடி பல அற்புதங்கள் செய்துள்ளார். அவர் பாடல்களுக்காக நதிவழி விட்டது; முதலை தான் பல வருஷங்கட்கு முன் உண்ட பாலனை மறுபடியும் உயிரோடு தந்தது; இழந்த கண்களைப் பெறவும் செய்தார்.

கம்பர் பெருமான் தமது ராமாயண காவியத்தைத் திருவரங்கத்தில் அரங்கேற்றியபொழுது,

நசைதிறந் திலங்கப் பொங்கிநன்று நன்றென்ன நக்கு
விசைதிறந் துருமுவீழ்ந்த தென்னவோர் தூணின் வென்றி
இசைதிறந் தமர்ந்தவையா லெற்றின னெற்றலோடும்
திசைதிறந் தண்டங்கீறிச் சிரித்தது செங்கட்சீயம்,

என்ற பாடலைப்பாடி வியாக்யானம் செய்தவுடன் ஆங்கிருந்த மோட்டழகிய சிங்கருடைய சிலை தன் கரங்களை நீட்டி முடியைத் தூக்கி வாயைத்திறந்து மண்டபம் அதிர ஜனங்கள் நடுங்கச் சிரித்து ஆர்ப்பரித்ததாம். கம்பர் சிதம்பரத்தில் பாம்புகடித்து இறந்த தில்லை மூவாயிரவர் பிள்ளையைத் தம் ராமாயணத்திலுள்ள நாகபாசப்படலத்தை வாசித்து உயிர்பிழைத்து எழச்செய்ததாகவும் கதையுண்டு.

தமிழ்ப்புலவர்கள் தமிழில் பாடல்கள்பாடி பூதங்களையும் பேய்களையும் அடக்கி வென்றிருப்பதாகவும் கதை கூறுவர். ஔவையார் ஒரு சமயம் தன்னை அடிக்க வந்த பெண் பிசாசொன்றை "வெண்பா விருகாலிற் கல்லானை" என்னும் கவிபாடி ஓட்டியதும், கம்பர் ஒரு சமயம் தனக்கு இடையூறாய் நின்ற ஒரு பிசாசை "நெற்கொண்டு போமளவும் நில்லாய் நெடுஞ்சுவரே" என்றுபாடி அடக்கியதும் எல்லோரும் அறிந்த கதைகளே.

அதுமட்டுமன்று; தமிழ்க் கவிகள் அசேதனப் பொருள்களையும்கூட தம் கவிகளால் ஏவல் கொள்வராம். உதாரணங்கள் ஔவையார் காய்ந்துலர்ந்த பனந்துண்டங்களை "திங்கட்குடையுடைச் சேரனும்" என்னும் பாடல்பாடி தழைக்கச்செய்து உடனே நுங்குக் குலைதரும்படி செய்ததும், அவர் பாண்டி

யன் சபையில் "ஆர்த்தசபை நூற்றொருவர்" என்னும் பாடல்பாடி சங்கிலி களை அறும்படி செய்ததும் ஆகும்.

தமிழ்ச் செய்யுள் சங்கப்பலகையை மிதக்கச் செய்தல், குறளுக்கு இடந்தரச் செய்தல், ஆழ்வார் பாசுரத்திற்குச் சுருங்கச் செய்தல், வில்லி புத்தூராழ்வார் பாரதம்பாடி இழந்த கண்ணைத் திரும்பவும் பெறுதல், நக்கீ ரர் திருமுருகாற்றுப்படை செய்து பூதத்தினின்று விடுதலை அடைதல், ஒளவையார் கூழைப் பலாத்தழைக்கச் செய்தல், கம்பர் செய்துள்ள கவி களில் தமி என்ற மொழி உபயோகத்தை ஒட்டக்கூத்தர் ஆட்சேபிக்க அது உலக வழக்கமாமெனச் சரஸ்வதி தேவியே இடைச்சியாய் வந்து நிரூபித்தல் முதலிய அற்புதங்களை விரித்துரையாது விடுக்கின்றேன்.

மேற்கூறிய புராண சம்பந்தமான காரணங்கள் எல்லாம் சற்று உற்று நோக்கி ஆராய்ந்தால் மூன்று இனங்களாகப் பிரியும். அவையாவன:—

(1) தமிழ்ப்பாஷை கடவுளால் சிருஷ்டிக்கப்பட்டது. ஏனைய மொழி களைப்போல் மனிதனால் ஆக்கப்பட்டதன்று.

(2) தமிழ்மொழியினிடத்து இதர மொழிகளினிடத்துக் காணப் படாத விசேஷ அன்பு கடவுளுக்கு உண்டு.

(3) தமிழ் மொழியினின்பாலுள்ள அன்பின் மிகுதியால் தமிழ்ப் பாவ லர்க்காகப் பல அற்புதங்களைக் கடவுள் செய்துள்ளார்.

இம்மூன்று விஷயங்களும் உண்மையானவைகளா? இவைகளை நம்ப முடியுமா? இவற்றைக்கொண்டு ஒரு பாஷையின் பெருமையை ஸ்தாபிக்க முடியுமா? என்ற விஷயத்தை அடுத்த வியாசத்தில் ஆராய்வேன்.

# திருநாவுக்கரசு சுவாமிகள் மாட்சி

———:(o):———

ஒரு தமிழாசிரியர்.

இவை நிற்க ஆன்மாக்கள் இருவினைக் கீடாக அண்டசம், சுவேதசம், உற்பிசம், சராயுசம் என்பவைகளாகிய நால்வகைத் தோற்றமும், தேவர், மனிதர், விலங்கு, பறவை, ஊர்வன, நீர்வாழ்வன, தாவரம் என்பவைகளாகிய எழுவகைப் பிறப்பும், தேவர் பதினொரு இலட்சம் மனிதர் ஒன்பது இலட்சம், நாற்கால் விலங்கு பத்து இலட்சம், பறவை பத்து இலட்சம், நீர்வாழ்வன பத்து இலட்சம், ஊர்வன பதினைந்து இலட்சம் தாவரம் பத்தொன்பது இலட்சமாகிய எண்பத்து நான்கு நூறுயிர யோனி பேதமும், உடையனவாய்ப் பிறந்திறந்து இளைத்துப் புண்ணிய மேலீட்டினால் மனிதப் பிறப்பிலே வருதல் மிகுந்த அருமையாம். ஆகையால் இவ்வரிய மானிடப் பிறப்பினை யடைந்தார்,

"அடைய வேண்டியதடைந்து மேற்றுயர மற்றின்பமன விலாதாய்க்
கடையதாம் தருவிலங்கு பறவைகள்போல் வீணுட்கள் கழியாதாகித்
தடையிலா மனனத்தால் வாழ்வதே யுயர்வாழ் நாள் சனனந் தீர்ந்தோர்
உடைய பிறப்புயர்ந்த தாங்கிழவே சரிப்பிறப்பா மொழிந்த வெல்லாம்"

என்றபடி மனிதப் பிறப்பிலே அடையவேண்டியவைகளை அடைய வேண்டுமென்பது பெறப்பட்டது.

இதற்காக இம்மனிதப் பிறப்பை யெடுத்தல் கடலைக் கையினாலே நீந்திக் கரை யேறுதலை யொக்கும்.

நாம் இப்பிறப்பை யெடுத்தது எற்றுக் கென்னில், கடவுளை மனம் வாக்குக் காயங்களினால் வழிபட்டு அளவில்லாத முத்தி இன்பத்தைப் பெற்றுய்யும் பொருட்டேயாம். சரீரம் கருப்பையில் அழியினும் அழியும். பத்து மாதத்தில் பிறந்தவுடனே அழியினும் அழியும். அதற்கு மேற்பட்ட மூப்பிலழியினுமழியும். எப்படியும் சரீரம் நிலையின்றி யழிவது உண்மை. இச்சரீரம் உள்ளபோதே இதன் நிலைமையை யுணர்ந்து பெருங் கருணைக் கடலாகிய கடவுளை வழிபட்டு உய்ய வேண்டும். இவ்வாறிருக்க உலகாயுதம் சௌத்திராந்திகம், யோகா சாரம், மாத்திகம், வைபாடிகம், நிகண்டவாதம் ஆசீவகம், பட்டா சாரியம், பிரபாகரம், சத்தப் பிரமவாதம், மாயா வாதம், பாற்கரியம், நிரீச்சுர சாங்கியம், சிவசாங்கியம், விஷ்ணு சாங்கியம், பாஞ்சராத்திரம், தருக்கம், மீமாஞ்சை, பாசுபதம், மாவிரதம், காளாமுகம், வாமம், பாடாண வாதசைவம், நிமித்த காரண பரிணாமவாதம், சைவம், சுத்த சைவம், அவிகாரவாத சைவம், ஐக்கியவாத சைவம், சிவசம வாத சைவம், கிரீடப் பிரமவாத சைவம், முதலாகிய எல்லாச் சமயங்களினும் மேலாகிய சைவ மார்க்கத்தைக் கடைப்பிடித்த திருவதிகையிலுள்ள சிவநேசச் செல்வர்கள் மருள் நீக்கியார் "சைவ சமயமே சமயம் சமயாதீதப் பழம் பொருளைக் கைவந்திடவே மன்றுள் வெளிகாட்டுமிந்தக் கருத்தை விட்டுப் பொய் வந்துழலுஞ் சமய நெறி புகுத வேண்டாம்" என்றபடி

இயல்பென்றுந் திரியாம லியம மாதி யெண்குணமுங் காட்டியன்பா [லின்பமாகிப்
பயனருளப் பொருள்கள்பரி வாரமாகிப் பண்புறவுஞ் சௌபான [பக்ஷங்காட்டி
மயலறுமந் திரஞ்சிக்ஷை சோதிடாதி மற்றங்க நூல்வணங்க [மௌன மோலி
அயர்வறச் சென்னியில் வைத்து ராஜாங்கத்தில் அமர்ந்ததுவை [திகசைவ மழகி தந்தோ

என்று கூறுவதினாலும்

"புன்புலால் யாக்கை புரை யுரை கனியப்
பொன்னெடுங் கோயிலாப் புகுந்தென்
னென்பெலா முருக்கி யெளியையை யாண்ட
வீசனே மாசிலாமணியே.
துன்பமே பிறப்பே யிறப்பொடு மயக்காந்
தொடர்பெலா மறுத்த நற்சோதி
யின்பமே யுன்னைச் சிக்கெனப்பிடித்தே
னெங்கெழுந் தருளுவ தினியே"

என்று ஸ்ரீமத் மணிவாசகப் பெருமான் திருவாய் மலர்ந்தருளியபடி சைவ சமயத்தில் அன்புபூண்டமையாலும் சிவபெருமான் தருமசேனர் என்னும் பெயர் பூண்டுள்ள மருள் நீக்கியாரைத் தடுத்தாட் கொண்டபின் அவரது திருவருளினால் சுவாமிகளுக்குத் தமிழ்ப்பாமாலை சாத்தும் ஞானவுணர்ச்சி தோன்றிற்று. அவ்வுணர்ச்சியால் எய்தும் பேறு பிறவாமைக்கு வித்தாகிய செய்கைகளைக் காட்டக் கூடியன வென்பதை அவரது அமுதவாக்கிற் றோன்றிய ஒவ்வொரு தேவாரப் பாக்களுமே தெற்றெனவுணர்த்தும். அவை வருமாறு:—

"இரவும் பகலும் பிரியாது வணங்குவ னெப்பொழுதும்"
"என்றும் நெஞ்சம் உமக்கே யிடமாக வைத்தேன்"
"நினையாதொரு போது மிருந்தறியேன்"
"பணிந்தாரன பாவங்கள் பாற்ற வல்லீர்"
"சலம் பூவொடு தூப மறந்தறியேன்"
"தமிழோடிசை பாடன் மறந்தறியேன்"
"நலந் தீங்கிலுமுன்னை மறந்தறியேன்"

என்ற அரும்பாக்களுட் பொதிந்த விஷயங்கள் யாவும் தற்போதங் கெட்டுப் பாடியவையேயாம். அடியார் பெருமான் இவ்வாறு பாடிப் பிரார்த்தித்துத் தோத்திரஞ் செய்தார். உடனே சூலைநோய் ஒழிந்தது. உடனே மருள் நீக்கியார் அன்புருவாய் நின்று விழுந்து புரண்டு சமணப் படுகுழியில் விழுந்து வருந்திய யான் சிவபெருமான் திருவடி யடைந்து பேரின்ப வாழ்வைப் பெறச் செய்த சூலைநோய்க்கு என்ன கைம்மாறு செய்வேனென்று தொழுதார். அப்போது பரமன் மொழிக்கு மொழி தித்திக்கும் தேவாரப் பதிகத்தைப் பாடினமையால் நாவுக்கரசு என்னும் அருமைத் திருநாமமே

ஏழுலகங்களினும் வழங்குகவென்று யாவரும் வியக்கும்படி ஒரு அசரீரி ஆகாயத்தி லெழுந்தது.

அதுகேட்ட அருளரசர் சமண சமயத்திலுழன்று தீவினை வயப்பட்டிருந்த அடியேனுக்குப் பெருவாழ்வு கிடைத்ததென்று ஆனந்தித்து அத்தன்மையாய இராவணனுக்குக் கருணைசெய்த திருவருட்டிறத்தின் பெருமையையுணர்ந்து துதிப்பதனையே மேற்கொண்டு மெய்யுற வணங்கினர். இதனைக் கண்ணுற்ற அடியவர்கள் பொய்ச் சமயமாகிய சமண சமயமழியத் திருவருளுண்டாகவும் சைவ சமயம் வளரவும், தெய்வத்திருவருள் நேர்ந்ததினாலே இனி உலகம் உய்ந்தது உய்ந்தது என்று கூறி ஆனந்தவாரியிற் றோய்ந்தார்கள். திருநாவுக்கரசு சுவாமிகள் மனம் வாக்குக் காயத் தொண்டுகளைச் செய்யவேண்டும் என்னும் பேரவாக்கொண்டு சிவசின்னங்களைத் தாங்கித் தியானமறாவுணர்வும் ஈறின்றியெழும் திருவாசகமும் உழவாரத் தொண்டும் உடையவரானர்.

சிவ புண்ணியமே ஒரு வடிவங்கொண்டு வந்தாலெனத் தோன்றும் திலதவதியார் சமண மதத்திலாழ்ந்து தடுமாறிய எம்மையும் ஒரு பொருளாக வெண்ணியாண்டருளிய சிவபெருமான் கருணைத் திறத்தை வாய்ந்தவரென்று மகிழ்ந்து அப்பிரானை வணங்கினர். பாடலிபுரத்திலுள்ள சமணர்கள் தரும சேனர்க்கு வந்த சூலை நோயைப் பலவித மந்திர செய்கைகளாலும் நம்தெய்வ மகத்துவத்தாலும் நம்மால் நமக்கு நீக்குவதற்கு இயலாமையாலே அவர் அந்நோயை நீக்கிக்கொள்ளத் திருவதிகைக்குச் சென்று சைவ மதத்தைச் சார்ந்து அதன் சார்பால் நோய் நீங்கி யுய்ந்தனர். இதனல் இனி நம் சமயம் அழியப் பெற்றது அழியப்பெற்றது என்று சொல்லி மயக்க முற்றுப்போய் ஓரிடத்தில் ஒருங்கு சேர்ந்தார்கள். இங்ஙனம் மருண்டுகூடிய சமணர்கள் அந்தோ தருமசேனர் சைவராயதைப் பல்லவராஜன் அறிவானுகில் அவனும் சைவனுவான். அன்றியும் நமது சமய விருத்தியையும் தவிர்ப்பானென்று கலங்கி ஆலோசனை செய்து ஒரு உபாயத்தைத் தேர்ந்துகொண்டு அரசன் இவ்விடயத்தைத் தெரிந்துகொள்ளு முன்னமே அவன் முன் நாமேபோய் முறையிட்டுக் கொள்வோ மென்று எழுந்திருந்து வாடிய முகத்தினராய் அரசன் அரண்மனை வாயிலைச் சார்ந்து வாயில் காப்பாளர்களை நோக்கித் தங்கள் வரவை அரசனுக்குத் தெரிவிக்கச் சொன்னர்கள். அவ்வாயில் காப்பாளர் அரசனுக்குப் போய் அறிவித்ததும் அரசன் அடிகண்மார்களை உள்ளே வரும்படி வாயில் காப்பாளருக்குத் தெரிவித்தான். அவர்கள் போய்ச்சொல்ல அடிகண்மாரும் அரசனை அடைந்தார்கள். அடைந்ததும் பல்லவ ராஜனைக்கண்டு நமக்கெல்லாம் ஆசிரியத்தன்மை வகித்தவரான தருமசேன ரென்பார் தமக்கையரான திலதவதியார் சைவமதத்தை யுடையரா யிருப்பதினாலே தாமும் சைவராக வேணுமென்று விரும்பித் தமக்குச் சூலைநோய் நேர்ந்ததாகப் பாவனை காட்டியும் அந்நோய் நம்மால் நீங்கவில்லையென்று பாசாங்கு செய்தும் திருவதிகை சென்று சைவராகித் தமது தெய்வத்தையும் சமயத்தையும் போற்றி நம் தெய்வத்தையும் சமயத்தையும் நிந்தனை புரிந்து வருகின்றாரென்று கற்பித்துப் புனைந்துரைத்தார்கள். அதைக்கேட்ட பல்லவராஜன் ஆற்றொணுத் துயரத்தைப் பூண்டவனுய் இங்ஙனம் நமது சமயத்துக்கெல்லாம் தாழ்வுண்டாகும்படிச் செய்த தருமசேனரை யாது செய்யலாமென்று கேட்டனன். அதற்கு அடிகண்மார் மிகவும் துன்புறுத்த வேண்டுமென்று கூறினர்கள். உடனே மன்னன் அத்

தீயோர்களை நோக்கி அவ்வாறே செய்வோமென்று விதந்து மந்திரிகளை நோக்கி அவனைப் பிடித்துக் கொண்டு வாருங்களென்று கட்டளையிட்டனன்.

அமைச்சர்கள் நூலிற்கூறிய முறைமையினைக்கொண்டு வினை செய்யுந் திறங்களை அறிந்த விடத்தும் அவ்வப்போது நிகழுமுலக வியற்கையை ஆராய்ந்தொழுக வேண்டுவது முறைமையாகலின் அரசன் ஆணையை மேற்கொண்ட அமைச்சர் திருநாவுக்கரசு சுவாமிகளைக் கண்டு உம்மை அழைத்து வரும்படி அரசன் எங்களை யேவினான் வரவேண்டுமென்று கூறினார்கள்.

**திருமறு மாற்றத் திருத்தாண்டகம்**

நாமார்க்குங் குடியல்லோ நமனையஞ்சோ
நரகத்திலிடர்ப்படோ நடலையில்லோ
மேமாப்போ பிணியறியோம் பணிவோமல்லோ
மின்பமே யெந்நாளுந் துன்பமில்லை
தாமார்க்குங் குடியல்லாத் தன்மையான
சங்கவெண் குழையோர் காதில்
கோமாற்கே நாமென்றும் மீளா வாளாய்க்
கொய்ம்மலர்ச் சேவடியிணையே குறுகினோமே.
நாவார நம்பனையே பாடப்பெற்றோ நாணற்றார்
நள்ளாமே விள்ளப் பெற்றோ
மாவாமென் றெமையாள்வா னமரர் நாத
னயனொடுமாற்கறிவரிய வனலாய் நீண்ட
தேவாதி தேவன் சிவனென் சிந்தை
சேர்ந்திருந்தான் றென்றிகைக் கோன்றனே வந்து
கோவாடிக் குற்றேவல் செய்கென்றாலும்
குணமாகக் கொள்ளோமெண் குணத்துளோமே.

என்று திருவாய் மலர்ந்தருளினார். அதைக்கேட்ட அமைச்சர்கள் அவரது திருவடிகளை வணங்கி வேண்ட நாயனார் எனக்கு வரும் வினைகளுக்கெல்லாம் எம்பெருமானுளன் என்று நினைந்து மந்திரிகளோடு பல்லவராஜன் சபையைச் சேர்ந்தார். அவரைக் கண்டு அஞ்ஞானக் கடலில் மூழ்கியவரசன் அழுக்காறுடைய அடிகண்மார்களை நோக்கி இவனை யென்செய்வது சொல்லும் என்ன சொல்லா விரதங்கொண்டும் கொடுமை செய்யும் சமணர்கள் இவனை நீற்றறையிலிட வேண்டுமென்று சொன்னார்கள். உடனே உணர்வில்லர்ப் பல்லவன் அருகிருந்த வேலாளரை நோக்கி அடிகண்மார் சொல்லிய படி நீற்றறையிலிடுங்க ளென்று ஆஞ்ஞாபித்தான். அவர்கள் அப்படியே எம்பெருவாழ்வை நீற்றறையிலிட்டுக் கதவைத் தாளிட்டார்கள். திருநாவுக்கரசு சுவாமிகள் தாண்டவ மூர்த்தியின் தாள் நிழலைத் தலைக்கொண்டு ஈசனடியார்களுக்கு ஈண்டு வருந்தும் துயருளவோவென்று அவ்வீசனையே நினைந்து மாசில் வீணையும் மாலை மதியமும் என்னுந் திருக்குறுந் தொகையை அருளிச் செய்தார்.

# ஓர் கவியின் பிரகிருதி வருணனை

———:(o):———

ஆ! மாமலரே! என்னைப் பார்த்து நீ நகைப்பதேன்? இனிய மந்த மாருதம் வீசுகின்ற அந்தி மாலையில் எப்பொழுதும் உனது விரிந்த நறிய இதழ்கள் சித்திரைக் கலைகளைப்போல் அழகாக விளங்குகின்றன வென்றா? உனது மெல்லிய இதழ்களின்மீது இனிய கீதம் பாடுகின்ற கரியவண்டுகள் வீற்றிருந்து முத்தமிடுகின்றன வென்றா? மந்த மாருத காலத்தில் ஒருவித இனிய நாதத்துடன் கீதங்களைப் பாடுகின்ற மலயமாருதன் உன்னைக் கட்டித் தழுவுகின்றனன் என்றா? நகைக்கின்றனை? நன்றாக நகை. இதில் எனக்கென்ன வெட்கம்?

கோகிலமே! என்னைப் பார்த்துப் பரிகசிப்பதேன்? சுவை தரும் மாமரத்தின் சிவந்த இளந்தளிர்களுடைய கொம்பின் நுனியில் வீற்றிருந்து இன்குரலெடுத்துத் தண்ணிய தொனியில் கூவுகின்றே னென்றா? நினது தீங்குரல் கேட்ட மக்கள் ஆனந்தவாரிதியில் ஆழ்கின்றார்களென்றா? இனிது துயில்கின்ற விசுவ குமாரியை, வைகறையாமத்தில் நீ இன் குரலால் கூவி விளிக்கச் செய்கின்றனை யென்றா? பரிகசிக்கின்றனை? நன்றாகப் பரிகசி! அதில் எனக்கென்ன வருத்தம்?

மேகமே! நீ என்னை ஆதரிக்காததென்னை? ஆகாயத்தில் சாந்த வீதியில் அழகாகச் சஞ்சரிக்கின்றனை யென்றா? காற்றின் உதவியினால் ககனமண்டலத்தில் வெள்ளிய திரையைப்போல் அழகான வர்ணமிட்டு ஒயிலாக உலாவுகின்றனை யென்றா! இனிய மந்த மாருதகான ரசத்தில் ஆழ்ந்திருக்கின்றனை யென்றா? அநாதரவுடன் இருக்கின்றனை! இருந்தால் இரு. எனக்கென்ன விசாரம்?

ஆகாயமே! என்னை ஏன் வாதிக்கின்றனை? மின்னிப் பிரகாசிக்கின்ற நட்சத்திர மலர்கள் பரந்த உனது வெளி மண்டலத்தில் விசாலமாக விரிந்து விளங்குகின்றன வென்றா? பேரொளி காட்டிப் பிரகாசிக்கின்ற துல்லிய தாரகைகள் என்னும் இரத்தினாபரணங்களை ஆகத்தில் அணிந்துகொண்டிருக்கின்றனை யென்றா? நீலநிற வீணையை ஒன்றுபோல் சுருதிகூட்டி இனிய நாதமெழச் செய்கின்றனை யென்றா? வாதிக்கின்றனை? நன்றாக வாதி! எனக்கென்ன துன்பம்?

அந்தகாரமே! என்னைப் பயப்படுத்துவதேன்? இம்மகா லோகத்தை உனது திறமையால் மறைத்துவிடுகின்றனை யென்றா? கவி குமாரனது இருதய கருப்பத்தின் இதழ்களை மலரச்செய்வதுபற்றியா? பயப்படுத்துகின்றனை? நன்றாகச் செய்! சுயேச்சையாய்த் திரிகின்ற எனக்கென்ன பயம்?

சி. து. நா.

# வால்மீகி ராமாயணம்.

(ஓரன்பர்.)

(250-ம் பக்கத் தொடர்ச்சி)

(5) சுந்தரகாண்டத்திற்கும் முன்போலவே ரிஷி சந்தோ தேவதைகளாம். அனுமான் இலங்கைக்குப்போக கடல் தாண்டியதை வர்ணிக்கும் சர்க்கத்தை இருநூறு தடவை பாராயணம் செய்ய தண்ணீரால் ஏற்படும் ஆபத்து நீங்கிவிடும். ஸனிர்ஜித்ய புரீம் லங்காம் என்ற ச்லோகத்தை முப்பத்திரண்டாயிரம் ஜபிக்கிறவன் ராஜ தண்டனையினின்றும் நீங்குவான். அனுமான் சீதையைக்கண்ட கதையைச் சொல்லும் சர்க்கத்தை 32000-ம் தடவை பாராயணம் செய்கிறவன் எல்லாவித சோகத்திலிருந்தும் நீங்குவான். திரிஜடையின் கனவைச் சொல்லும் சர்க்கத்தைப் பாராயணம் செய்கிறவன் ஒரு பொழுதும் கெட்ட கனவே காணமாட்டான். அனுமான் சீதையினிடம் கணையாழியைக் கொடுத்த சர்க்கத்தைப் பாராயணம் செய்கிறவன் காணமல் போன பதார்த்தங்களை யெல்லாம் எளிதில் கண்டெடுப்பான். அனுமான் இந்திரஜித்தின் பிரம்மாஸ்திரத்தால் கட்டுண்ட கதையைச் சொல்லும் சர்க்கத்தைப் பாராயணம் செய்கிறவன் எல்லா நிர்ப்பந்தத்திலிருந்து நீங்கிவிடுவான். அனுமான் இலங்கையைச் சுட்ட கதையைச் சொல்லும் சர்க்கத்தை 32000-ம் தடவை பாராயணம்செய்ய நெருப்பினால்நேரும் உபத்திரவத்திலிருந்து நீங்குவான். அப்பொழுது சீதை அக்னிபகவானை நோக்கி அனுமானுக்கு உபத்திரவம் நேரிடாமலிருக்கவேண்டுமென்று வணங்கிக் கேட்டுக்கொள்ளும் "சீதோபவ ஹனுமத:" என்பதைக் கொண்டு முடியும் ஸ்லோகங்களை ஒரு வருஷ காலம் பாராயணம் செய்கிறவன் உஷ்ணத்தால் ஏற்படும் சகல வியாதிகளிலிருந்தும் விடுபடுவான்.

(6) அனுமான் ஸஞ்சீவி என்ற ஔஷதத்தைக் கொண்டுவந்த கதையைச் சொல்லும் சர்க்கத்தைப் பாராயணம் செய்கிறவன் எல்லாவித விஷங்களிலிருந்தும் நீங்குவான். இலக்குமணன் இந்திரஜித்தை வதைக்கும்பொழுது சொன்ன "தர்மாத்மா சத்ய சந்தஸ்ச" என்ற மாலா மந்திரத்தை 32,000-ம் தடவை ஜபிக்க சத்துருக்களை வெல்லுவான். நாலு அங்குலம் இரும்புத் தகட்டில் ஷட்கோண மொன்றைச் செதுக்கி அதைச்சுற்றி முப்பத்திரண்டு இதழ்களுள்ள தாமரைப் பூவையும் செதுக்கி ஷட்கோணத்தினுள் பிரணவத்தையும் ஷட்கோணங்களில் "ராம் ராமாய நம:" என்ற மந்திரத்தையும் ஷட்கோண சந்தியில் "சிம் சீதாயை ஸ்வாஹா" என்ற மந்திரத்தையும் இதழ்களில் "தர்மாத்மா சத்ய சந்தஸ்ச" என்ற மாலா மந்திரத்தை ஒவ்வொரு எழுத்தாகவும் எழுதி இரண்டு பூபுரங்களை வரைந்து அதனுள் யந்திர காயத்ரி மந்திர காயத்ரிகளை எழுதி பூபுரத்தை மெய்யெழுத்துக்களால் அலங்கரித்து ராம சஹஸ்ர நாமத்தைச் சொல்லி யந்திரத்தை ஒரு வருஷம் பூஜை செய்ய சத்துருக்களை யெல்லாம் வென்றுவிடுவான். ஸ்ரீராமருக்கு அகத்திய முனிவர் உபதேசித்த ஆதித்ய ஹிருதயத்தை ஒவ்வொரு நாளும் பாராயணம்

செய்து அப்பெயர்களை நமோந்தமாக மாற்றி சூரியனைப் பூஜை செய்கிற வர்கள் நேத்திர வியாதி, உதர வியாதி முதலிய தீராத கொடிய வியாதிகளி லிருந்து நீங்கிச் சுகமடைவார்கள். ஸ்ரீராமர் ராவணனை சம்ஹாரம் செய்யும் கதையைச் சொல்லும் சர்க்கத்தைப் பாராயணம் செய்கிறவர் சகல துக்கங் களிலிருந்தும் நீங்கி பரமசுக மடைவார்கள்.

இதற்கு ஆதிகாவ்யம் என்றும் ஒரு பெயர் உண்டு. இராமாயணத்தில் அடங்கியுள்ள பற்பல கதைகளையும் படிக்குங்கால் "விநாசகாலே விபரீத புத்தி:" "கேடுவரும் பின்னே மதி கெட்டுவரும் முன்னே" என்ற நியாயமே விளங்குகிறது. உதாரணமாக சில கதைகளை இங்குக் கூறுவோம்.

(1) தசரத சக்கரவர்த்தி இளவரசனாக இருந்த பொழுது மாரிகாலத் தில் ஒரு நாள் வேட்டைக்காகக் கானகம் சென்று இரவில் தண்ணீர் அருந்த வரும் மிருகங்களைக் கொல்லலாம் என்று எண்ணி ஒரு குளத்தின் அருகில் ஒளிந்திருந்தான். அங்கு அந்தகர்களான வயது சென்ற பெற்றோர்களுக்குத் தண்ணீருக்காக வந்த ஒரு ரிஷி குமாரன் தண்ணீர் எடுக்கும் பொழுது உண்டாய சப்தத்தைக் கேட்டு பிரமித்து தனது சப்தவேதி வித்யையின் சாமர்த்தியத்தைக் கொண்டு சப்தம் வரும் திசையை நோக்கி அம்பு எய்தான். பிறகு அங்கு சென்று பார்த்த பொழுது குற்றுயிராகக் கிடக்கும் ரிஷி குமா ரனைக் கண்டான். ரிஷி குமாரன் வார்த்தைப் பிரகாரம் தண்ணீருடன் அந்த ரிஷியிடம் சென்று அங்கு நடந்த சமாசாரத்தைத் தெரிவிக்க அவரும் அர சில்லையோ அரசாணையும் இல்லையோ, வேலியே பயிரைத் தின்றுவிட்டதே, என் அருமை மகனை மாய்த்த மாபாபி மன்னா, நீயும் என்னைப்போல் பிள்ளை யைப் பிரிந்து மரண மடைவாயாக என்று சாபமிட்டார். ஐயோ! கஷ்டம்! தசரத சக்கரவர்த்திக்கும் கேடுவரும் முன்னே மதி கெட்டது.

(2) போர்க்களத்தில் தனது பிரிய மனையாளாகிய கைகேயி புரிந்த உதவிக்கு மெச்சி தசரதர் அவளுக்கு இரண்டு வரங்களைக் கொடுத்தார். கைகேயியும் தனது கணவனை நோக்கி நாதா இவ்விரு வரங்களும் தங்க ளிடமே இருக்கட்டும். வேண்டும் பொழுது வாங்கிக் கொள்வேன் என்று வைத்திருந்த இருவரங்களைக் கொண்டு இராமரைக் காட்டிற்குத் துரத்தி னாள். தசரதரும் ரிஷி வாக்கியத்தின்படி பிள்ளையைப் பிரிந்து மரித்தார். அந்தோ கஷ்டம். தசரதருக்கு வரம் கொடுக்க புத்தி நேர்ந்தது. கைகேயி யும் வரத்தைப் பெற்று இராமரைத் துரத்தி புருஷனை இழந்தாள். வைதவ் யம் அடைந்தாள். ஐயோ! கஷ்டம்! கைகேயிக்கும் கேடு வருவதற்குமுன் மதி கெட்டது.

(3) இராமர் சீதை இலக்குமணர்களுடன் காட்டிற்குச் சென்றார். அது பொழுது காட்டிற்குச் செல்லவேண்டாமென்று வசிஷ்டர் முதலிய குருக் கள் சொன்னபோதிலும் அவர்களின் வார்த்தையைச் சிறிதும் கவனியாமல் சீதையும் காட்டிற்குச் சென்றாள். அங்கு அநேக துன்பங்கள் அடைந்தாள். சீதைக்கும் கேடுவரும் முன்னே மதி கெட்டது. அங்கு பொன்மானாக மாறிய மாரீசனுடைய உதவியைக் கொண்டு இராவணன் சீதையை அபகரித் தான். அது ஏதுவாக இராவணன் இறந்தான். இராவணனுக்கும் கேடு வரும் முன்னே மதி கெட்டது. மாரீசனும் இராமரால் வதைக்கப்பட்டான். அவ னுக்கும் மதி கெட்டது. பொன்மானைப் பிடிக்க சீதை தன் கணவனை வேண்டினாள். சீதைக்கும் மதி கெட்டது. இராமரும் அதற்கு இசைந்தார். ஐயையோ! கஷ்டம்! அவருக்கும் மதி கெட்டது.




## தமிழ்ப் பெண்களின் வீரம்

தமிழ்ச் சுவை தழைத்தோங்கிய பாவலர் பலர் இயற்கை வளங்களை இன்பச் சுவை சொட்டச்சொட்டப் பாடிய பல நூல்கள் தமிழ் மொழியில் இருப்பதைக் காணுந்தோறும் நம்மனத்தில் உண்டாகும் இன்பத்துக்கு அளவே யில்லை. அவற்றிலிருந்து நாம் நமது பண்டைக்கால பழக்க வழக்கங்களையும், பெருமைகளையும், மக்கள் நாகரிகத்தையும், உள்ளது உள்ளவாறே அறிந்து கொள்ளுகிறோம். நமது பழந் தமிழ் நூல்களில் காணப்படும் சில சிறந்த பெண்மணிகளைப் பற்றி இங்குக் கூறுவோம்.

நாடு முன்னேற்ற மடைய வேண்டுமானல் வீடு முன்னேற்ற மடைய வேண்டும். வீடு முன்னேற்ற மடையாவிட்டால் நாடு முன்னேற்றம் அடையாது என்று நிச்சயமாய்க் கூறிவிடலாம். வீடு முன்னேற்ற மடையவேண்டுமானல் முக்கியமாய் வீட்டில் உள்ள பெண்மக்கள் முன்னேற்ற மடைந்தவர்களாக இருக்கவேண்டும். பெண்மக்கள் முன்னேற்றமடைவதென்றால் என்ன? விதவிதமான நகை, புடவை, ரவிக்கை முதலியவைகளோடு விளங்குவதா? அன்று அன்று. முன்னேற்ற மென்னும் பதத்திற்கே அறிவில் முன்னேற்றம் என்பதே பொருள். ஆணாயினும் சரி, பெண்ணாயினும் சரி அறிவில் முன்னேற்ற மடைந்தவர்களே உண்மையான முன்னேற்ற மடைந்தவர்களாவார்கள். இதுவே முன்னேற்றம் என்பதின் சரியான பொருளாகும். அறிவில் முன்னேற்ற மடைந்தவர்கள் மற்றவைகளில் முன்னேற்ற மடைவார்கள் என்பது சொல்லாமலே விளங்கும்.

இத்தகைய முன்னேற்றத்தையுடைய மனைவியைக் கொண்ட வீடு விளக்க மடையும் என்று சொல்லவும் வேண்டுமோ? அப்படிப்பட்ட பல வீடுகளைக் கொண்ட நாடு உயர்ந்து விளங்குமென்பதை யாரே மறுப்பர்! நமது நாடு சீர்பெற வேண்டுமென்று நினைக்கின்றவர்கள் பெண்களை அறிவில் முன்னேற்ற மடையச் செய்யவேண்டும்.

கணவன் எவ்வளவு வல்லவனாயினும் அறிவாளியாயினும் மனைவி அறிவுடையவளாய் இராவிட்டால் குடும்பம் தலையெடுக்காதென்பது உண்மை. கணவன் சிறிது பகுத்தறி வற்றவனாயினும், மனைவி அறிவுடையவளாயின் குடும்பம் குறைவுறாது என்பது உண்மை. கணவனை விட மனைவிக்குக் குடும்ப முன்னேற்றத்தில் அதிகப் பொறுப்பு இருக்கிறது. பெண்களுக்குக் கல்வி கற்றுக்கொடுப்பது மட்டும் போதாது. அவர்கள் கற்கும் கல்வி அவர்

களுடைய பிற்கால வாழ்க்கைக்குப் பயனளிக்கக் கூடியதுதானு வென்று கவனிக்கவேண்டும். ஆர்மோனியம், பிடில், பாட்டு முதலியவைகளை வாழ்க்கையின் பத்தாவது பன்னிரண்டாவது லட்சியங்களாக நினைத்து அறிவின் முன்னேற்றத்தையே வாழ்க்கையின் முதல் லட்சியமாகக் கொண்டு, அம் முன்னேற்றத்தில் தம் பெண்மணிகளை ஒவ்வொரு தாய் தந்தையர்களும் செல்ல விடுவார்களானுல் உண்மையில் நமது நாடு முன்னேற்ற மடையும் என்பது திண்ணம்.

அறிவில் முன்னேற்ற மடைந்த பெண் ஒழுக்கமும் அமைதியும் சாந்தமும் ஒருங்கே பெற்றிருக்கக் காணலாம். பெண்களை அறிவில் முன்னேற்ற மடையச் செய்யாமல் அவர்களுக்கு எவரும் காணுத மோட்ச நரகங்களைக் கூறி சந்தோஷத்தையோ, பயத்தையோ காட்டித் திருத்தி விடுதல் என்பது நிலையான நன்மையைத் தராதகாரியம். அத்தகைய அஸ்திவாரமில்லாத போதனைகள் பயனற்றவையென்று அறிவாளிகள் முற்றும் அறிந்துவிட்டனர்.

பண்டைக் காலத்தில் உண்மையான அறிவைப் பெற்றிருந்த நமது நாட்டுத் தாய்மார்கள் மோட்சம், நரகம் என்னும் எண்ணமில்லாமலே கற்பிற் சிறந்த வீரமணிகளாய் விளங்கினர் என்பது எவரும் அறிந்த விஷயமே.

முன்னெரு காலத்தில் தமிழ்நாட்டில் வீரனெருவன் இருந்தான். அவன் அரசனுடைய படையில் ஒரு சேனு வீரனு யிருந்தான். அவனுடைய அரசனுக்கும் வேறொரு அரசனுக்கும் பகை ஏற்பட்டுப் போர் மூண்டது. அந்தப் போரில் அந்த வீரன் உயிர் துறந்தான். அந்த வீரனுக்கு ஒரு மனைவியும் ஒரு மகனும் உண்டு. ஆகவே அவனுடைய மனைவிக்கு அவனுடைய மகனைத் தவிர வேறு ஆண் துணையே கிடையாது. வேறு பிள்ளைகள் பிறக்கவும் வழியில்லாமலிருந்தும் அவள் "நமது அரசன் இன்னும் யுத்தம் செய்துகொண்டிருக்கிறபடியினுல் நாம் நம்மாலான உதவியை அவனுக்குச் செய்யவேண்டும்" என்று எண்ணி, தன் சிறு குமாரனுக்குப் போர்க்கோலஞ் செய்து பின்னர் அவனை நோக்கி, "உன் அரசன் வெற்றிபெற நீ அவனுக்காகச் சென்று விரோதிகளை அழித்து வருவாயாக" என்று கூறி அவனை அனுப்பினுள். என்னே இவளுடைய தேசாபிமானம்! இத்தகைய உணர்ச்சி மீண்டும் நமது தாய்மார்களுக்கு வரவேண்டுமானுல் நாம் அவர்களை அதற்கேற்ற வழியில் வளர்க்க வேண்டும் அல்லவா?

மற்றொரு ஸ்திரீயின் மகன் போர்க்களத்தில் தன்னரசனுக்காகப் பகைவர்களோடு சண்டை செய்து மார்பில் படுகாயம் உண்டு சுத்த வீரனுக உயிர் துறந்தான். அதை அறியாத ஒரு பேதை அவன் தாயிடம் சென்று "உன் மகன் சண்டைக்கஞ்சி புறமுதுகு காட்டி ஓடி முதுகில் படுகாயம் மேற்பட்டு உயிர் துறந்தான்" என்று கூறினுள். அதைக் கேட்டவுடன் இறந்தவனுடைய தாய், 'என்னுடைய மகன் ஆண்மையற்று வீரம் குன்றி என் அரச

னுக்கும் என் நாட்டுக்கும் நன்மை செய்யாமலா சண்டைக்கஞ்சி முதுகில் அடிபட்டு இறந்தான்?' என்று கூறி, 'நான் இப்போதே போர்க்களஞ் சென்று அவனுடைய பிணத்தைப் பார்க்கின்றேன். அவன் முதுகில் காயம்பட்டு இறந்திருப்பானாயின் அவன் பேடியெனத் தீர்மானித்து அவனுக்குப் பால் கொடுத்த என் ஸ்தனங்களை அறுத்தெறிந்து விடுகிறேன்' என்று சொல்லிப் போர்க்களம் சென்று அங்குக் கிடந்த பிணங்களைப் புரட்டிப் புரட்டிப் பார்த்தாள். அங்கே ஓரிடத்தில் தன் மகன் மார்பிலும் முகத்திலும் கணக்கற்ற காயம்பட்டு இறந்து கிடப்பதைக் கண்டாள்; அவன் முதுகில் ஒரு காயமும் இல்லாமல் இருப்பதை உணர்ந்தாள். அப்போது இறந்த தன் மகனை மீண்டும் உயிரோடு கண்டாற்போல் களித்தாள். "என் மகன் ஒரு வீரனைப் போலவே சண்டைசெய்து இறந்திருக்கிறான்" என்று சொல்லிக் களித்திருந்தாள். இவளைப் பற்றி நாம் எவ்விதமாகத்தான் புகழ்ந்தெழுதக் கூடாது. இத்தகைய பெண்மக்களுக்குப் போதிய அறிவின் முன்னேற்றம் இல்லை என்று எவரேனும் கூறமுடியுமா?

இத்தகைய வீரப் பெண்மணிகளும், கற்பிற் சிறந்த காரிகைகளும் நமது நாட்டில் முன் காலத்தில் பலர் இருந்தனர். அப்படிப்பட்டவர்கள் முன் காலத்திலிருந்தமைக்குக் காரணம் யாது? அக்காலத்தில் இருந்தவர்கள் தங்கள் பெண்களை அறிவில் முன்னேற்ற மடையச் செய்துவந்தார்கள்; அதனால் அக்காலம் சிறந்திருந்தது. இக்காலத்திய தாய் தந்தையர் தங்கள் அருமைப் பெண்களைப் பெரும்பாலும் சரியான முறையில் வளர்க்கிறார்கள் என்று சொல்ல முடியாது; ஏனெனில் இக்காலத்திய பெரும்பான்மையான தாய், தந்தையர்களுக்குச் சரியான மார்க்கம் இன்னதென்றே தெரியாது என்றே கூறலாம். நாம் இவ்வாறு கூறுவது சிலருக்கு வருத்தமா யிருப்பினும் உண்மையை எழுதாதுவிட நம்மால் முடியவில்லை.

உண்மையில் நமது நாடு முன்னேற்றமடைய வேண்டுமானால் நமது பெண்மணிகளை உண்மையான அறிவுத்துறையில் முன்னேற்றமடையச் செய்யுங்கள். வெறுங் கோலாட்டத்தாலும், பின்னல்களாலும் ஆர்மோனியம், பிடில் முதலியவைகளாலும் ஒன்றும் சீர்மை அடையமுடியாது. ஆதலால் உண்மையான அறிவில் பழகினால் முன்னேற்ற மடைய வழியுண்டாகும் என்பதோடு இச்சிறு வியாசத்தை முடித்துக் கொள்ளுகிறேன்.

"மார்க்கபந்து"

சந்தாதாரர்களுக்கு.—சந்தா நெம்பர் தெரியாதவர்கள் மாதமாதம் வரும் சஞ்சிகையின்மேலுள்ள விலாசத்தில் குறிக்கப்பட்டிருக்கும் நம்பரைப் பார்த்துக் குறித்து வைத்துக்கொள்ளக் கோருகிறோம்.

# நோய்க் கிடங்கொடேல்

## (வாயுவின் இலக்கணம்)

(டர்பன், ஸ்ரீ. ச. முனிஸ்வாமி பிள்ளை எழுதியது.)

சில் வாழ்நாட் பல பிணிச் சிற்றறிவுடைய மக்களாகிய நாம் உய்தல் வேண்டி, நஞ்செந்தமிழ் நாட்டிடைத் தோன்றி நலம்படு நூல்கள் பல வியற்றி அரிய பெரிய உண்மைகளை நமக்கு விளக்கிச் சென்ற பெரு மூது மக்களுள் ஔவைப் பிராட்டியாரும் ஒருவரென்பதை நாமெல்லோரும் நன்கறிவோம். இவர்கள் அரிய விஷயங்களைச் சிறிய வாக்கியத் தானமைத்துச் சிறுமகார் மனதினுஞ் செவ்விதிற்பதியும் வண்ணம் இயற்றியருளிய "ஆத்தி சூடி" என்னும் நூலின் கண்ணுள்ள உபதேச மொழிகளுள் ஒன்றும், "நோய்க் கிடங் கொடேல்" என நாம் எடுத்துக்கொண்ட விஷயம். ஒருவருக்கு ஒரு விஷயத்தை ஒருவர் அறிவுறுத்த வேண்டுவாராயின், அங்ஙனஞ் செய்தற்கு ஒருவகையான முறைகளிருக்கின்றன. அவை தாம் உடம்பாட்டு (Affirmative) வகையா னறிவுறுத்த லென்பதும், எதிர்மறை (Negative) வகையான் அறிவுறுத்த லென்பதுமாம். உடம்பாட்டாற் கூறுவதினும், எதிர்மறை முகத்தாற் கூறுவதே ஆற்றல் மிக்குத் தோன்றுமாகலின் ஒருவிஷயத்தை வற்புறுத்திக் கூறவேண்டிய விடத்தெல்லாம் எதிர்மறை வகையாற்றானே கூறுவர் அறிவுடையோர். நோய்க் கிடங் கொடேல் என்பதன் கருத்து சரீரத்தைச் சுகமாக வைத்துக்கொள் என்பதே யன்றி வேறல்ல. எனவே, சரீரத்தைச் சுகமாக வைத்துக்கொள் என்று உடம்பாட்டாற் கூறுவது நோய்க் கிடங் கொடேல் என எதிர்மறையாற் கூறுவதுபோல அவ்வளவு ஆற்றலைப் பயக்கவில்லை. இவ்வுண்மையறிந்தே எதிர்மறை வகையான் நமது அன்னையார் வற்புறுத்திக் கூறியதை நோக்குங்கால் இவ்வுபதேச வாக்கியத்தின் அருமையும், அதனை உணர்ந்து நாம் நடக்கவேண்டிய அவசியமும் இனிது புலப்படும்.

இனி "நோய்" என்பது யாது? அஃது "மரம்" "காற்று" என்று சொல்லப்படுகின்ற பொருள்களைப்போ லுள்ளதோர் குணிப்பொருளா? இல்லை, சொன் மாத்திரையாயுள்ள குணப்பெயரே (Abstract) யாகும். "பிருதிவி, அப்பு, தேயு, வாயு, ஆகாயம் என்னும் தத்துவங்களின் தூல சூக்கும காரியங்களான அகப்புறக் கருவிகளின் இயைபு குன்றியும் மிகுந்தும் நிலைகுலைதலே நோய்" எனப்படுவதல்லது அஃதோர் தனித்திரவிய

மன்று. இதுபற்றியே 'மிகினுங் குறையினு நோய் செய்யுநூலோர்—வளி முதலா வெண்ணிய மூன்று' என்று ஆசிரியர் திருவள்ளுவனார் அருளிச் செய்வாராயினர். பழவினையானுங் காரணங்களானுமே நோய் வருமென்றும், அவற்றுட் பழவினையான் வருவன அதன் கழிவின் கண்ணல்லது தீரா வென்றுங் கூறுவர் ஆன்றோர். ஏனைக்காரணங்களான் வருவனவற்றை வரவொட்டாமற் றடுக்கவும், வந்தால் போக்கவும் மக்களாகிய தமக்குச் சாத்தியமாகும்.

இனிக் காரணங்கள் இருவகைப்படும். அவை தாம் 'குணத்தான் வருவனவுந் தொழிலான் வருவனவுமாம். அவை அளவு முதலிய ஏற்றத் தாழ்வால் வருவனவெல்லாம் குணத்தால் வருவனவாம். மனமொழி மெய்களின் தொழில் நிலைமாறுதலான் வருவனவெல்லாம் தொழிலான் வருவனவாம். குணவொத்தலுந் தொழிலொத்தலும் முறை பிறழாது சரிவர நடைபெறுமாயின் பிணி என்பதே அணுகமாட்டாது. பெரும்பான்மையும் நோய் சரீரத்தைப்பற்றியே நிகழும். அங்ஙனம் பற்றவொட்டாது சரீரத்தைச் சுகமாக வைத்துக்கொள்ளலே மக்களின் இன்றியமையாத கடமையாம் என்பதை வற்புறுத்துதலே "நோய்க் கிடங்கொடேல்" என்பதன் கருத்தாகும். அற்றேல், சரீரசுகம் பேணுவதவசியந்தானோ வெனின், அவசியமேயாம்; ஏனெனில் சரீரசுகமின்றி ஆன்ம சுகம் சித்தித்தல் எவ்வாற்றானுஞ் சாத்தியமல்ல.

மக்கட்கு ஆன்மா, சரீரம் என இரண்டுளவேனும் ஆன்மாவின்றிச் சரீரந் தனித்தியங்கவும், சரீரமின்றி ஆன்மா தனித்தியங்கவும் கூடாவாம். இவ்விரண்டினுக்கும் அவ்வளவு நெருங்கிய சம்பந்தமிருக்கிறது. சரீரத்தினுள்ளிருக்கும் சீவன் தனக்கென ஓர் உருவின்றித் தான் சார்ந்த சரீரமே தனக்குருவாய்க் கொண்டிருக்கிறது. அங்ஙனமிருக்கு மிடத்தும் தான்வேறு உடம்பு வேறு என்னும் பேதந் தோன்றுவாறு, இராமா, கோவிந்தா என உடம்புக்கிட்ட பெயரானழைத்த ழைத் தான் ஏன் என்கின்றது. இதனாலேயே உடம்பிற்கும், உயிருக்குமுள்ள சம்பந்தம் எவ்வளவு நெருங்கியதென்பது புலப்படுகின்றதன்றோ? அப்படி யிருப்பினும் உயிர்வேறு, உடம்பு வேறுதான். ஆன்மாவிற்குச் சாதகமாக இவ்வுடம்பு இறைவனுற்றரப்பட்டதாகும். இயற்கையிலேயே, ஆணவ மலத்தால் (ஆணவ மலத்திற்கு ஆன்மாவின் அறிவை மறைத்துக்கொண்டிருக்கும் குணமாம்.) மறைக்கப்பட்டு அறிவு மழுங்கிக் கிடக்கும் ஆன்மாவிற்கு அறிவை விளக்குவது மாயா காரியமான இச்சரீரமேயாம். நமது ஆன்மா அறிவு விரிந்து திகழவேண்டியே இறைவன் தனுகரணபுவனங்களைச் சிருட்டித்துக் கொடுத்தார்.

ஆதலால் ஞானபிவிருத்திக்குச் சரீரசுக மின்றியமையாது வேண்டப்படுமென்பது பெறப்படும். நோயின்றிச் சரீரத்தைக் சுகமாக வைத்துக்

கொள்வதற்குப் பொருள்களின் இலக்கணங்களை அறிந்துகொள்ளல் அவசியமாகும்.

இனி, பொருளை அகப் பொருளென்றும், புறப் பொருளென்றும் பகுத்துப் புறப் பொருளை மீண்டும் சேதனம் அசேதனமென இரு கூறாகப் பிரித்திருக்கின்றார்கள் நமது ஆன்றோர்.

இனிச் சாத்திரவகையா னாராயுங்கால், எல்லாப் பொருள்களும் (1) கன பதார்த்தம் (Solid) (2) திரவ பதார்த்தம் (Liquid) (3) வாயு பதார்த்தம் (Gas) என மூன்று பகுதியினு ளடங்குவன வாகும். இம்மூன்றனுள்ளும் வாயு பதார்த்தமே மக்கட்கு இன்றியமையாது வேண்டப்படுவதாகும். எங்ஙனமெனின் கன பதார்த்தமாகிய உணவு இன்றி ஏழெட்டு நாளும், திரவ பதார்த்தமாகிய தண்ணீரின்றி இரண்டொருநாளும், ஒருவன் உயிருடனிருக்கக் கூடுமேயாயினும், வாயு பதார்த்தமாகிய காற்றில்லாமல் ஒரு சில நிமிஷமும் உயிருடனிருக்க முடியாதாதலா லென்க. ஆதலால் ஏனையவற்றை விடுத்து மிகவும் பிரதானமான வாயு பதார்த்தத்தைப்பற்றி மட்டுமே ஒரு சிறிது ஆராய்வாம். "நோய்க்கிடங் கொடேல்" என விஷயத்தை எடுத்துக்கொண்டு வாயு பதார்த்தத்தைப் பற்றிக் கூறப்புகுதல் ஈண்டைக்கு 'வேண்டா கூறலா' மெனச் சிலர் கருதக்கூடும். அங்ஙனமன்று சுகவாழ்விற்குச் சுத்த ஆகாயமுங் காற்றுமே ஏனையவற்றைவிட இன்றியமையாதன வாதலானும், நாம் சுத்த ஆகாயத்தை யுட்கொள்வதற்கு வாயுவினிலக்கணந் தெரியவேண்டுவ தவசிய மானதாலும் வாயு பதார்த்தத்தைப் பற்றி நாம் தெரிந்துகொள்ளக் கடமைப் பட்டவர்களாகவே யிருக்கின்றோம். ஆதலால் வாயு மண்டலத்தைப் பற்றிச் சிறிது ஆராய்வாம்.

இந்நிலவுலகின் மேற் பரப்பிலிருந்து சற்றேறக்குறைய நூறுமைல் உயரத்திற்கு வாயு மண்டலம் யாண்டும் பரந்து வியாபித்திருக்கிறது. வாயு மண்டலத்திலுள்ள சுத்தமான காற்று நிறமின்றியும், சுவையின்றியும், வாசனையின்றியு மிருக்கும்; ஆனால், நிறை, அளவு, விரிவு முதலான குணங்களுடையது. இனி வாயு மண்டலத்தில் நான்கு வகையான வாயுக்கள் இருக்கின்றன. அவை (1) பிராணவாயு (Oxygen) (2) ஜலவாயு (Hydrogen) (3) உப்புவாயு (Nitrogen) (4) கரியமிலவாயு (Carbonic Acid-Gas) என்பனவாம். இவற்றுள் பிராணவாயுவே பிரதானமானது. பிராணவாயுவின்றி மக்களாகிய நாமும் ஏனைய ஜீவராசிகளும் கணமும் உயிருடனிருத்தல் இயலாது. இவ்வுண்மை கொண்டே இதற்குப் பிராணவாயுவென நமதான்றோர் பெயரிட்டார்கள். நெருப்பிற்கும் இவ்வாயுவே ஆதாரமாக விருக்கின்றது. நாம் பானம் பண்ணுகிற நீரினும் இதன் கலப்பிருக்கின்றது. ஒன்பது பங்கு தண்ணீரில் எட்டு பங்கு பிராணவாயு கலந்திருக்கிற தென்றுணர்ந்து கோடல் வேண்டும். தண்ணீரை மின்சார உதவிகொண்டு வாயு ரூபமாக

மாற்றலா மென்றும் அங்ஙனஞ் செய்யின் பிராணவாயு ஒரு பங்காகவும் ஜலவாயு இருபங்காகவும் பிரிந்து நிற்குமெனவும், பௌதிகசாத்திரிகள் உண்மை புலப்படுத்தினார்கள். இவ்விருவாயுக்களின் வேறுபாடு தெரிந்து கோடற்குக் கொழுந்து விட்டெரியும் தீச்சுடர் வர்த்தியினை, வாயுக்கள் பிரிக்கப்பட்டு வைத்திருக்கும் இரண்டு பாத்திரங்களுள்ளும் தனித்தனி நுழைத்தால், ஒன்றில் அச்சுடர் கொழுந்து விட்டு முன்னிலும் பிரகாசமாக எரியும்; அப் பாண்டமே பிராணவாயு அடங்கியதாம். மற்றொன்றில் சுடரெரியாது. அப் பாத்திரத்தின் வாயோரமே, நீல நிறத்தோடு எரியும் ; அதுவே ஜலவாயு அடங்கியதாம்.

கோடை காலத்தில் குளங்கள், குட்டைகள் முதலானவைகளில் நீர் வற்றி வறண்டுபோயிருப்பதைக் காண்கின்றோம். ஒரு காலத்தில் நிறைய நீர் பெய்து திறந்தபடியே வெளியான ஓரிடத்தில் வைத்திருப்போமாகில் சிறிது சிறிதாக நீர் குறைந்து இறுதியில் ஒன்றுமில்லாமற் போவதையும் காணலாம். அங்ஙன மாதற்குக் காரணம் யாது? கதிரவன் கிரணத்தால் சலம் நீராவியாகத் திரிந்து திரிந்து, ஆவி வாயு மண்டலத்திலிழுத்துக் கொள்ளப்படுகிறதே காரணம். இங்ஙன மிழுத்துக் கொள்ளப்பட்ட வாயுவே நமக்குப் பின் மழையாக வருஷித்து அளவற்ற பயனைக்கொடுக்கிறது. மழை யின்றி உலகத்தி லெக்காரியமும் நடவாதன்றோ? மழை யின்றேல் உலக மின்று. இதற்கு "வானின்றுலகம் வழங்கி வருதலாற்—றான மிழ்தமென் றுணரற் பாற்று" என்னும் பொய்யா மொழியே சான்றாமென்க. அங்ஙன மாயின் இம்மழைக்கு ஆதாரமாகிய நீர் வாயுவின் உபகாரம் இத்துணையா மென்பதாகக் கூறவும்படுமோ ? இனி வாயு மண்டலம் ஒரு பங்கு உயிர் வாயு கொண்டிருக்கிறதென வைத்துக் கொண்டால் உப்பு வாயு அதைவிட நான்கு மடங்கு அதிகமாக விருக்கிறது. இவ்வளவு பிராண வாயுவுடன் கலந்திரா விடின் உலகத்துக் காணப்படும் சகல கடின பதார்த்தங்களும் நீராய்ப்போகும். பிராண வாயுவினது ஆற்றலைக் குறைப்பதற்காக இறைவன் இதை வாயு மண்டலத்தில் அமைத்திருக்கின்றார். உயிருடைய பிராணிகளனைத்தினும் இவ்வாயு காணப்படும். தீக் கொழுந்தை இவ்வாயு அடங்கிய பாண்டத்தில் நுழைத்தால் அச்சுடர் அணைந்துபோம். இனிக் கரிவாயு வென்பது யாதென ஆராய்வாம். வாயு மண்டலத்தே கலந்திருக்கும் வாயுவின் ஒரு பகுதியை எடுத்து அதை 2500 கூறாகப் பகுப்பின் ஒரு கூறு இக் கரி வாயுவாம். ஏனைய வாயுக்களிலும் இதுவே கனமிக் குடைத்து. உலகத்துக் காணப்படும் இயற் பொருள் அனைத்தும் கரி யென்னும் ஓர் மூதற் பொருளைக்கொண்டே இருக்கும். பொருள்கள் எரியுங்கால் அவைகளில் அடங்கியிருக்கும் கரி தனியாகப் பிரிக்கப்பட்டு வாயு மண்டலத்திற்குச் சென்று உயிர் வாயுவோடு கலந்துவிடும். எரிமலைகளிடத்தும் மக்கள் வெளிவிடும் சுவாசத்திலும், இவ்வாயு மிகுதியாக உண்டு. உப்பு வாயு

வைப்போலவே இதற்கும் எரிகிற நெருப்பை அணைத்துவிடும் சக்தியுண்டென்பதை அறியவும். இவ்வாயு அளவிற்குமேல் அதிகரிப்பின் மக்களுக்குப் பிணியும், பலவீனமு முண்டாம். இவ்வாயு சுத்தமானதும், நிறமற்றதுமான சுண்ணாம்புத் தண்ணீரிற் படுமாயின் அத்தண்ணீர், பால்போல் வெண்மையாக மாறிவிடும். உப்பு வாயுவிற்கு இக்குண மில்லை; ஆகவே இவ்விரண்டினுக்கும் வேற்றுமை தெரிந்துகொள்ள இஃதோர் முறையாக விருக்கிறது. நான்கு பிரதான வாயுக்களின் இலக்கணங்களைப் பற்றி ஒரு சிலவே ஈண்டு உரைத்தாம். வாயு-நிறை, அளவு, பிரிவு முதலான குணங்களை யுடையது எனக் கூறினோ மன்றோ? அவற்றுள் விரிவைப் பற்றி மட்டுஞ் சிறிது நன்குரைப்பாம்; ஏனை விரண்டும் ஈண்டைக்கு அத்துணை ஆவசியகமன்று. ஒரு பொருள் விரிதற்கு உஷ்ணமே காரணமாம். அதுபோலவே குளிர்ச்சியால் குறுகலுறும்; நம்முடைய கைவிரலை ஜலத்திலேயே வைத்திருந்தால் அவ்விரல் முன்னினும் மெல்லிதாகத் தோன்றும். அங்ஙனந் தோன்றுதற்குக் காரணம் விரலின் தோல் சுருக்க மடைவதேயாம். புகை வண்டி செல்லும் இரும்புக் கம்பிகளை நாம் கண்ணுற் றிருக்கின்றோமல்லவா? ஓர் இரும்பு தண்டவாளத்தையும் மற்றோர் தண்டவாளத்தையும் சேர்த்துப் பிணைக்குங்கால் நெருக்கிச் சேர்க்காமல் சிறிது இடைவெளி வைத்தே சேர்ப்பார்கள். ஏனெனில் வெயில் காலத்தில் சூரிய உஷ்ணத்தால் இக் கம்பிகளின் நீளம் அதிகமாகும். நெருக்கியே போட்டுவிட்டால் விரிவதற்குக் கூடாமல் ஒன்றோடொன்று மோதுண்டு பிறழ்ந்துபோம். மழைகாலத்தில் இத் தண்டவாளங்களுக்கு இடையே வெளி தோன்றுவதும், வெயில் காலத்தில் தோன்றாததுமே உஷ்ணத்தினால் பொருள்கள் விரிவடைகின்றன என்பதற்கும் குளிர்ச்சியால் சுருங்குகின்றன என்பதற்கும் போதிய சான்றாம். இங்ஙனமே வாயு பதார்த்தங்களும் வெப்பத்தால் விரிவடையும், பொருள் விரிந்து செல்லச்செல்ல இலேசாகும். பூமியின் ஓர் பாகத்துள்ள வாயு வெப்பமடைந்து விரியவே இலேசாகி மேலேறும்; அஃது மேற்செல்லவே அவ்விடத்தை நிரப்புவதற்குப் புறத்தேயுள்ள வாயு வந்து சேரும். இதுவும் வெப்பமடைந்து மேற்செல்லும். இங்ஙனமே நிகழா நிற்கும் வாயுவி னியக்கம். இவ் வியக்கத்தினாலே காற்று உண்டாகின்றது. நோய்க்கும் வாயு மண்டலத்திற்கும் ஒருவிதமான சம்பந்தமும் இல்லாவிடின் வாயு விலக்கணத்தைப் பற்றி நாம் இங்கு கூறவேண்டுவதே யின்றாம். அங்ஙனங் கூறினும் 'மற்றொன்று விரித்தல்' என்றுங் குற்றத்தின்கட்படும். ஆகவே சரீர சுகத்திற்கும், வாயு மண்டலத்திற்கும் நிரம்ப சம்பந்த முண்டென்பது பெறப்படும். வாயு மண்டலம் சுத்தமாகவே யிருப்பின் நோயென்பதே யின்றாம். வாயு மண்டலத்தை அசுத்தமாக வைத்திருப்பின் பிணி வருவதற்குத் தடையே இல்லை. வாயு மண்டலம் சுத்தமா யிருக்க வேண்டுவ தவசியமாதலானும், அங்ஙனம் சுத்தமாக வைத்துக் கொள்வதற்கு அதனைச் சுத்தப்படுத்தும் முறையும் தெரிந்து கொள்ள வேண்டிய தின்றியமையா தாதலானும், இவைகளைத் தெரிந்து கோடற்கு வாயுவி னிலக்கணம் ஒரு சிறிதாயினும் அறியப்படுதல் வேண்டு மாதலானுமே வாயுவைப் பற்றி இத்துணையுங் கூற நேரிட்டது.

---

# சீனமும் பரதமும்

(கதாரத்ன சே. கிருஷ்ணசாமி சர்மா.)

பரதகண்டத்தின் நாகரிகத்தையும், தருமோபதேசங்களையும் எந்த மகான் பல துன்பங்கட்கும் உட்பட்டுத் தன்னலங் கருதாது சீன நாட்டில் பரவச் செய்தாரோ அப்பெரியாரைக் குறித்துச் சிறிதேனும் நம் சரித்திரங்களில் காண்பதில்லை. ஆனால் சீனாவின் சரித்திரத்தில் அவர்களின் பெயர் பிரசித்தி பெற்றிருக்கிறது. மற்றும் சீன பாஷையைக் கற்று, நமது புலவர்களின் சரிதங்களை உலகிற்குக் காட்டிய மேனாட்டு வித்வான்களுக்கு நாம் நன்றி பாராட்டக் கடமைப்பட்டிருக்கிறோம். அவர்களில் எபல், ரெமூஸத், ஜூலியன், ஸெம்யூல்பீல், ஜேம்ஸ் லேகீ, சவன்ஸ், பீலியட், வில்பன்தாபீ, வர்னப், ஹென்ரி கோர்டியர் ஆகிய இவர்கள் முக்கியமானவர்கள். இவர்களின் விடா முயற்சியால் சீனாவின் கல்விச்சிறப்பும் தருமங்களும் உலகப் பிரசித்தியாயின.

இவ் விஷயங்களைக் குறித்து ஒரு வங்க வித்வான் ஓர் நூலை இயற்றியுள்ளார். அதனைத் தழுவிச் சில விஷயங்களை அறிவிக்கிறேன். கிறிஸ்து சகாப்தம் முதல் நூற்றாண்டில் சீனாவை 'மிங்கடி' என்னும் மன்னன் சிறப்புடன் ஆண்டுவந்தான். அவனுக்கு ஓர் நாளிரவு, ஆஜானுபாகுவும், ஒளி நிறைந்த வுடலும், 12 அடி உயரமும், சிரசு சுற்றிலும் சூழ்ந்து நிற்கும் ஓர் பிரகாசமும் பொருந்திய ஓர் திவ்ய புருடர் கனவில் தோன்றினார். மறுநாள் தனது மந்திரிக்கு அவ்விஷயம் அறிவித்து இது என்ன? என்றார். மந்திரி "வேந்தே! பரதநாட்டில் கைவல்லிய ஞானம் கொண்ட புத்தபகவானிருக்கிறார். அம் மகானின் தேஜஸ் ஆகாயத்தில் சஞ்சரிக்குங்கால் தாங்கள் பார்த்திருக்கலாம் என்று பதில் கூறினார். அரசன் ஆச்சரியத்துடன் அக்கணமே தன்னிடமுள்ள வித்வான்களில் 18 பேரை புத்தர் நீதியைக் கற்றுவர பரதநாட்டிற்கு அனுப்பினார். அவர்கள் இந்நாட்டிற்கு கி. பி. 64 ஆண்டில் வந்து 75 ஆண்டுவரை புத்தர் நீதியைக் கற்றுச் சீனாவிற்குச் சென்றனர். அவர்கள் ஓர் புத்தவிக்கிரகத்தையும் புத்தர் கூறிய 42 சூத்திரங்களையும் காச்யபமாதங்கர், தருமரக்ஷ என்னும் இரு கவிஞர்களையும் கொண்டு சென்றனர். காசிபமாதங்கரின் உபதேசத்தால் மன்னன் நகர வாயிலின் அருகே ஓர் புத்தர் ஆலய மேற்படுத்தினான்.

இக்காசிப மாதங்கர் மகதநாட்டைச் சேர்ந்தவர். சீனாவினின்றும் வித்வான்கள் வந்த காலத்தில் காந்தாரநாட்டில் வசித்துவந்தார். இவர் சீனாவில் புத்ததருமத்தைப் போதித்து பிரசாரம் செய்தார். மன்னரும் புத்த மதத்தைச் சேர்ந்தார். பின்மாதங்கர் சீன பாஷையைக் கற்றுப் புத்தநூல்களை

வடமொழியினின்றும் சீன பாஷையில் மொழி பெயர்க்கத் தொடங்கினர். முதலில் 42 சூத்திரங்களை மொழிபெயர்த்தார். இவர் காலஞ்சென்ற பின் தருமராக்ஷர் இவ்வேலைகளைச் செய்துவந்தார். இவர் 5 நூல்களை மொழி பெயர்த்தார். இங்ஙனம் புத்தமதம் சீனவில் பரவத் தொடங்கிற்று. கி. பி. 76 ஆண்டில் 'மிங்கடி' மன்னன் காலஞ்சென்றார். அவர் பின் மன்னரும் பரத நாட்டினின்றும் வித்வான்களை வரவழைத்து புத்தமத பிரசாரம் செய்வித்தனர். கி. பி. 65 ஆண்டு முதல் 1054 ஆண்டுவரை பரதநாட்டு வித்வான்கள் சீனவிற்குச் சென்று வந்தனர். இம்மேதையர் புத்த மதம் பரவச் செய்ததுமன்றி பரதநாட்டின் நாகரிகத்தையும் பரவச் செய்தனர். மேல் நாட்டு ஆராய்ச்சியாளர்களால் 62 வித்வான்களின் சரிதம் புலப்படுகிறது. அவற்றுள் சில கீழ்க் குறிக்கிறோம்.

குமாரஜீவன்:—இவர் புத்த தருமத்தின் மேன்மை, கீர்த்தி முதலியவற்றைச் சீனவில் சிறப்பாகப் பரவச் செய்தார். இவர் பல நூல்களைச் சீனபாஷையில் மொழிபெயர்த்தார். மதபிரசாரர்களையும், புத்த சன்யாசிகளையும் ஏற்படுத்தினர். சில சன்யாசிகளை 'பஹீன்' என்பவரின் தலைமையின் கீழ் பரதநாட்டிற்கு மதப்பிரசாரத்தின் பொருட்டு அனுப்பினர். இவரது தந்தை ஓர் அரசாங்கத்தில் மந்திரியாக விருந்து வேலையைவிட்டு புத்தமதத்தைத் தழுவினர். பிதாவின் பெயர் குமாரர். அன்னை பெயர் ஜீவ. ஆகையாலேயே இவர் பெயர் குமார ஜீவனாயிற்று. இவர் கி. பி. 344 ஆண்டில் பிறந்தார். ஜீவ இவரை ஏழாவது ஆண்டில் புத்த விகாரத்திற்கு அனுப்பினள். அவ்விடம் புத்த சூத்திரங்களை நன்கு கற்றார். 9-வயதில் காஸ்மீரம் சென்று பந்துதத் தாசாரியிடம் கல்வி கற்றார். 20-வது வயதில் தீக்ஷைபெற்றுக் கொளசதேச விகாரத்தில் இருந்து வந்தார். கி. பி. 401-ஆண்டில் சீனவிற்குச் சென்று அப்போதைய சக்கரவர்த்தியின் வேண்டுகோளின்படி மதப்பிரசாரம் செய்தார். 12-வருடங்களில் 100-புத்த நூல்களைச் சீன பாஷையில் மொழி பெயர்த்தார். எல்லாவற்றிலும் இவரது நூலே மேலோங்கி நிற்கிறது.

காச்மீர அந்தணராகிய விமலாக்ஷன் குமார ஜீவனின் குருவாம். இவரும் புத்த சன்யாசியே. இவரும் சீனவிற்குற்குச் சென்று தன் சீடனுக்கு மொழிபெயர்ப்பில் உதவி புரிந்தார்; சீடன் இறந்தபின் அவ்வேலையை மேற்கொண்டார்.

தருமக்ஷேமன்:—7-ஆண்டுகளில் (கி. பி. 414-421) பல நூல்களை மொழி பெயர்த்தார். இவரது கியாதி சீனவில் மட்டுமல்லாது பிறநாடுகளிலும் உலாவி வந்தது. இவர் ஓர் கொடியவனால் கொல்லப்பட்டார். இவரது நூல்களில் 12-இப்போதும் சீனவில் பரவி இருக்கின்றன.

குணவர்மன்:—காச்மீரவாசி. தரும பிரசாரத்தில் பெயர் பெற்றவர். 30-வயதிலே புத்த தர்ம மறிந்த வித்வானென கியாதிபெற்று தீக்ஷ

பெற்றார். இவர் க்ஷத்திரியர். அரசாங்கத்தை விட்டுச் சன்யாசம் பெற்றார். இவர் முதலில் சிம்மளத்திலும், பின் ஜாவா, சீனுவிலும் மதப்பிரசாரம் செய்தார். 431-ஆண்டில் இவர் சீனு சென்றபோழ்து மிகவும் ஆதரித்தனர். 10-நூல்களை மொழி பெயர்த்தார். 67-வயதில் காலகதி யடைந்தார்.

குணபத்திரன் :—இவர் 435-ஆண்டில் சீனுவிற்குச் சென்றார். 5-வருடங்கள் விடாது நூல்களை மொழிபெயர்த்தார். இவர் எழுதிய 7-நூல்களில் 2-மாத்திரம் இப்போழ் திருப்பது விசனிக்கத்தக்கது. 77-வயதில் மரணமடைந்தார்.

மோதிருசி :—வட இந்தியாவில் வசித்து வந்தவர். கி. பி. 58-ஆண்டில் சீனுசென்று 24-ஆண்டுகள் மதப்பிரசாரம் செய்தார். 30-நூல்களை வடமொழியினின்றும் மொழி பெயர்த்தார்.

நரேந்திரயசன் :—இவர் பரதநாட்டிலும் இலங்கையிலும் புத்தமதப் பிரசாரம் செய்தார். 556-ஆண்டில் சீனுவிற்குச் சென்றார். 15-நூல்களை மொழி பெயர்த்தார். வித்வானும், அறிவாளியு மாகையால் கியாதி பெற்றார். 589-ஆண்டில் பரமபதமேகினர்.

பரமார்த்தன் :—இவர் உஜ்ஜயினி வாசி. கி. பி. 548-ல் சீனு சென்றார். ஆங்கு 21-வருட மிருந்தார். 50-மதநூல்களை மொழி பெயர்த்தார். 71-வயதில் விண்ணுல கேகினர்.

ஜீனகுப்தன் :—இவர் க்ஷத்திரிய வித்வான். காந்தார வாசியாகிய வஜ்ரஸாரரின் குமாரர்; கல்வியில் குமார ஜீவனை யொத்தவர். 7-வயதிலேயே சன்யாசம் பெற்றார். ஜினயசனின் சீடர். குரு அருளினுலேயே இவர் பிரசித்தி பெற்றார். பல கஷ்டங்களை மேற்கொண்டு கி. பி. 557-ஆண்டில் குருவுடன் கலந்து சீனு சென்றார். இவ்விடத்தே பிரசித்திபெற்றுத் தருமபிரசார சங்கத்துக்குத் தலைவரானர். பின் மன்னனுக்கும் அமைச்சரானர். மன்னன் கட்டளைப்படி பரத நாட்டின் ஜோதிடநூற்கள் பல சீனபாஷையில் மொழி பெயர்க்கப்பட்டது. இவர் 37-மதநூல்களை மொழி பெயர்த்தார். கி. பி. 600-ல் 78-வயதில் லோகாந்தரம் சென்றார். இவர் பல தீமைகளுக்குட்படினும் தன் தருமத்தை நிறைவேற்றினர்.

அமோக வஜ்ரன் :—8-வது நூற்றாண்டில் மகா வித்வான்; வட இந்திய அந்தணர். வஜ்ரபோதி சீடர். குருவுடன் கி. பி. 719-ஆண்டில் சீனு சென்றார். 732-ஆண்டில் குரு காலஞ் சென்றார். முடிவு காலத்தில் அவ்வமைச்சர் மதப்பிரசாரம் செய்யும்படி கட்டளை இட்டார். அதுபோல் பல மதநூல்களைப் பரத கண்டத்தில் கண்டெடுத்து 746-ம் ஆண்டில் மறுபடியும் சீனு சென்று தரும பிரசாரம் செய்தார். சீனு மன்னன் ஞான மோக்ஷங்களை விளக்கினுரென்று இவரை நன்கு கௌரவித்தார். இவர் 77-நூல்களை மொழி பெயர்த்தார். இவைகளில் தந்திர 'நூல்களு முண்டு. 774—ல்

விண்ணுலக மேகினார். வேந்தன் இவர் மீதுள்ள பக்திக்கு ஓர் ஞாபகச் சின்னமும் ஏற்படுத்தினார்.

தருமதேவர் :-நலந்த சர்வ கலாசாலையி னின்றும் கி.பி. 973-ம் ஆண்டில் இவர் சீனு சென்றார். 981-ம் ஆண்டு வரையில் 46-நூல்களை மொழி பெயர்த்தார். அதன் பின் தரும பிரசாரம் செய்தார். மன்னன் இவரை மிகவும் கௌரவித்தார். 1001-ல் மரண மடைந்தார்.

தானபாலன் :—இவர் சீனுவிற்கு 980-ல் சென்று 111-நூல்களை வடமொழியினின்றும் சீனபாஷையில் மொழி பெயர்த்தார். இவருக்கு மன்னன் சில பட்டங்களையும் அளித்தார்.

ஞானஸ்ரீ :—1053-ல் சீனு சென்றார். சீனுவிற்குச் சென்ற பரத நாட்டு வித்வான்களில் இவரே கடைசியானவர். 2-நூல்கள் மாத்திரம் மொழி பெயர்த்தார்.

இவ்வறிஞர்கள் சீனுவில் மதப்பிரசாரம் செய்ததுமன்றி, கல்வி, ஞானம், சிற்பம், சித்திரகலை முதலியவற்றைக் குறித்தும் பிரசாரம் செய்தனர். இவரது கிருஷியினுலேயே பரத நாகரிகம் நிலைகொண்டது. இவ்வறிஞர்களால் 1000-நூல்கள் சீன பாஷையில் மொழிபெயர்ப்புற்றன. இவைகளில் பல நூல்கள் இன்றும் உலாவி வருகின்றன. இவைகளுக்கு முதல் நூல்கள் இப்போழ்து நம்நாட்டில் காணப்படவில்லை. பாரதநாட்டுக் கல்வி திபெத்து மங்கோலியா ஜாவா, சுமித்திரா, ஜப்பான், சிங்களம் முதலிய நாட்டுக் கல்வியைவிடச் சிறந்ததாம். ஆகையால் நமது கல்வியைக் குறித்து தேசிய வாதிகள் சரித்திரங்களைப் பரிசீலனம் செய்வார்களாக!

# புஷ்பராகத் தோடு

(பண்டித - லி. ராமசாமி.)

நான் பிறந்த வேளையின் கோளாறோ என்னவோ, சிறுவயதி லிருந்தே எனக்குச் சண்டை என்றால் மகா சந்தோஷம். இளம் பிராயத்தில் ஏதாவது ஒரு விஷயத்தைக் குறித்து என்னுடைய விளையாட்டுத் தோழர்களோடு சும்மா வாதிட்டுக்கொண்டே இருப்பது வழக்கம். பிறகு காலஞ் செல்லச் சொல்ல மாணவர் "டிபேட்டிங்கு சொஸைட்டி"யில் வாதம். ஒருவர் "ஆம்" என்று சொன்னதை நான் "அல்ல" என்று சொல்ல வேண்டும்; "அல்ல" என்று சொன்னதை "ஆம்" என்று சொல்லவேண்டும். இது என்னிடத்தில் இயற்கையாக உள்ள சகஜ குணம். பிற்பாடு வீட்டில் சம்சாரத்தோடு கலகம். "கலகம்" என்பதற்கு எத்தனையோ அர்த்தம் உண்டு. நீங்கள் எதை வேண்டுமானாலும் வைத்துக் கொள்ளுங்கள். என் "கலக"த்துக்கு மாத்திரம் "இன்பக்கலகம் அல்லது காதற்கலகம்" என்றே பொருள். நான் ஒருவர் ஜோலிக்குப் போகமாட்டேன். ஆனால் வீட்டில் காதலியோடு கலகம் இல்லாமல் இருக்கமாட்டேன். என்னுடையது "காதல் வாழ்க்கை" என்பது என் பாவனை. ஏதாவது ஒரு குட்டிக் கலகமாவது அப்பப்போது இல்லாமல்போனால் எனக்கு "காத"லில் உள்ள சுவை அவ்வளவு ருசிகரமாகத் தெரிவதில்லை. இதுவே என் மனப்போக்கு. ஆகையால் காரணம் இல்லாமலே—(காதற் கலகத்துக்குக் காரணம் கிடைக்காமற் போகிறதா ?) எனது காதலியை கலகத்தில் இழுத்துவிடுவேன். இது எனக்கு வெகு சாதாரண சுபாவமாகிவிட்டது. என்னதான் செய்தாலும் அந்தச் சுபாவம் மாறாமலே இருந்து வருகிறது. நாளா வட்டத்தில் அது எனக்குள்ளே ஒரு வியாதியாகவே பரிணமித்து விட்டது. அது எனக்குள் அடங்கி இருந்து வாரத்தில் ஒருநாளிலோ, பத்து நாளுக்கு ஒருதரமோ, முக்கியமாய் ஏதேனும் செலவு ஏற்பட்ட நாளிலோ தலையெடுத்து விடுவது வழக்கம். இதில் எனக்கு ஒரு பெரிய வெறி.

"காதல்" என்றால் என்ன என்று எனக்குத் தெரியாது. ஆனால் எனது மனைவியை நான் காதலிக்கிறேன் என்பது மாத்திரம் எனக்குத் தெரியும். எப்படி? காதலின் உண்மை என்ன ? என்றால் அது என்னமோ படித்த பண்டிதர்களைத்தான் கேட்கவேண்டும். என்னுடைய காதல் தத்துவம் வேறு. என்னுடையதே எனக்குச் சரி. ஒருவருடைய கருத்து எப்படியோ

இருக்கட்டும். அதைப் பற்றி எனக்கு என்ன கவலை? உலகம் பலவிதம். அதை யெல்லாம் நான் ஏன் கவனிக்க வேண்டும்.

காதல் எப்போதும் கலகலப்பில் இருக்கவேண்டும். காலக் கிரமத்தில் வளர்ச்சிபெற வேண்டும். களங்கமற்று விளங்கவேண்டும். அதில் எந்த விதமான களங்கமும் இருக்கக்கூடாது.

ஆனால் காதலானது கலகலப்பில்-உற்சாகத்தில் இருக்கிறதா இல்லையா என்பது எப்படித் தெரிந்து கொள்ளுவது? காரணமில்லாத கலகங்களால்! பாதகமற்ற சண்டைகளால்! அதற்கும் ஒரு அளவு உண்டு. அப்போது அங்கே தான் ஆனந்தரசம் சொட்டும். ஒரு உதாரணம் கொடுக்கிறேன் கேளுங்கள். நாம் சாதாரணமாக ஸ்நானம் செய்வதற்குக் குளத்திற்குப் போகிறோம். குளத்தில் தண்ணீர் நிச்சலமாய் அசைவற்றுத் தேங்கி நிற்கிறது. அடுத்தாற்போல் அதற்குச் சமீபமாய் ஒரு ஆறு ஓடிக்கொண்டிருக்கிறது. மேலே இருந்து அலைகளோடு கர்ஜனை செய்துகொண்டு பிரவாகம் வந்து கொண்டிருக்கிறது. இந்த இரண்டையும் பாருங்கள். இப்போது ஒரு முடிவுக்கு வாருங்கள். ஸ்நானம் செய்வதற்கு நம்முடைய மனதைக் கவர்ந்து உற்சாகங் கொடுப்பது எது? குளமா, ஆறா?

இன்னும் ஒன்று. சர்க்கஸில் பெரிய புலிகளோடும், சிங்கங்களோடும் வந்து ஆட்டங் காட்டுகின்றவர்களைப் பார்த்திருப்பீர்கள். படுத்துக்கொண்டிருக்கிற புலி, சிங்கங்களோடு விளையாடுகின்றார்களா? இல்லை. எழுப்புகிறார்கள். அவைகளுக்கு ஆக்கிரோஷமும் கோபமும் பிறக்கிற வரை இடிக்கிறார்கள். அவை வாயைப் பிளந்து கொண்டு அவர்கள் மீது பாய வருகின்றன. அப்போது அவைகளால் ஆகக்கூடிய வேலைகளை எல்லாம் அவைகளைக் கொண்டு செய்கிறார்கள்.

மற்றொன்று பாருங்கள். பாம்பாட்டி பாம்புப் பெட்டியைத் திறக்கிறான். அதில் பாம்பு சுருண்டு படுத்துக்கொண்டிருக்கிறது. அதை ஆட்டுவது எப்படி? அதை மகுடியைக்கொண்டோ அல்லது கையைக்கொண்டோ இடிக்கிறான். அதற்கு வலி கண்டு "புஸ்" என்று அவனைக் கொத்தக் கிளம்புகிறது. அப்பொழுது அதை ஆட்டுகிறான்.

இந்த உதாரணங்கள் போதும்! இப்போது ஆலோசியுங்கள். காதல் ஒழுங்காய் முறையாய் சாந்தமாய் இருந்துகொண்டு வந்தால் அதில் அழகு, ஆனந்தம், ருசி இருக்குமா? இருக்கவே இருக்காது. அது பேச்சுப் பேச்சுக்கு "புஸ்" "புஸ்" என்று கிளம்பிக்கொண்டிருக்கவேண்டும். எதிர்த்து நிற்க வேண்டும்; சினங்கொண்டு சீறவேண்டும். அந்த அந்தச் சமயத்தில் அப்படி அப்படியே குளிர்ந்து தணிந்துவிடவும் வேண்டும். இதுதான் என்னுடைய காதல் தத்துவம்.

ஆகையினாலே வாரத்துக்கு ஒருநாளாவது நான் கலகம் இல்லாமல் இருக்கமாட்டேன். நான்தான் இப்படி என்றால் என் மனைவியும் எனக்குக் குறைந்தவள் இல்லை. அவளுக்கு மூக்கின் முனையிலேயே இருக்கிறது கோபம்! முகம் கொஞ்சம் சுளித்தால் போதும், வந்துவிடும் உடனே பிகுவு! இதனாலே எனக்குக் கலகத்துக்குக் காரணம் வெகு சுலபத்தில் கிடைத்து விடுவது வழக்கம்.

இனி இவ்வளவோடு என்னுடைய பாயிரத்தை முடித்துக்கொண்டு வெகு சமீபத்தில் நடைபெற்ற ஒரு விஷயத்தைச் சொல்லுகிறேன் கேளுங்கள்.

தீபாவளி நெருங்கிக்கொண்டிருக்கிறது. அதோடு அந்த வாரத்தில் செலவு கொஞ்சம் அதிகம். எங்கும் போகவில்லை. வீட்டிலேயே இருக்கிறேன். ஆகையால் கலகம் இல்லாமல் இருக்க முடியுமா? ஆனால் காரணம் இருக்கவேண்டும் அல்லவா! ஆலோசித்துக்கொண்டிருக்கிறேன். ஒரு நாளெல்லாம் இதே ஆலோசனைதான். அநேக காரணங்கள் வந்து வந்து போய்க்கொண்டிருந்தன. ஆனால் ஒன்றாவது நல்லதாகக் கிடைக்கவில்லை. ஏதனால் என்பீர்களோ? எங்கள் இருவர் சண்டையும் மூன்றாம் பேருக்குத் தெரியக் கூடாது. மூன்றாம் பேருக்கு எதிரில் அதிருப்தி, முகச்சுளிப்பு, முணுமுணுப்பு, சிடுசிடுப்பு இருக்கக் கூடாது. எவ்வளவானாலும் உள்ளுக்குள்ளேயே மசியவேண்டும். வெளிக்கு முகத்தின்மீது மகிழ்ச்சி, உற்சாகம், திருப்தி, உல்லாசம் முதலிய சந்தோஷக் குறிகள் தாண்டவம் ஆடிக்கொண்டிருக்கவேண்டும். இல்லாதபோனால் எனக்குப் படுகோபம் வந்துவிடும். இப்போது அநேக நாட்களுக்குப் பிறகு எனது சிறிய தாயார் மகளும் (என்றால்—என் தமக்கை) தன் கணவனும் ஆறு வயது பையனும் ஊரிலிருந்து வந்திருக்கிறார்கள். பண்டிகைக்கு என்று அழைத்துக்கொண்டு வந்தோம். இவர்களுக்கு முன்னால் நாங்கள் சண்டை பிடித்துக்கொள்வது எப்படி? ஆகையால் இந்தத் தடவை கலகம், முக்கியமாய் அவரவர் மனதுக்குள்ளேயே இருந்துபோக வேணும் என்று யோசனை செய்துகொண்டிருக்கிறேன். குற்றங்களைத் தேடிக்கொண்டிருக்கிறேன். தேடுகிறவர்களுக்குக் குற்றங் கண்டு பிடிப்பதுதானா கஷ்டம்! எவ்வளவு சிறு காரணமானாலும் போதும் என்று நினைத்துக்கொண்டிருக்கிறேன். (தொடரும்.)

# பண்டைப்புலவர் மாட்சி

T. S. குழந்தைவேல் முதலியார்.

பண்டைநாளில் தண்டமிழ்ப் புலவர்கள் மிக்க வறுமையுடையோரா யிருந்தன ரென்பது புறநானூறு போன்ற பழம் பனுவல்களைச் சிறிது ஆய்வோரும் தெற்றென உணர்வர். சான்றாக, "சமைத்தற் றொழி லின்மையின் அடுப்பின் கண் காளான் பூத்துக் கிடந்தது" என்று தொடங் கும் கருத்துடைய

> "ஆடுநனி மறந்த கோடுய ரடுப்பின்
> ஆம்பி பூப்ப"....................
> ....................................

எனவரும் ஒரு புலவரின் சிந்தையிற் கொள்ளும் செந்தமிழ்ப்பாவொன்றுமே போதியதாகும். புலவர்கள் செல்வத்தில்தான் ஏழையா யிருந்தனரே யன் றிக் கல்வியிற் சிறிதும் தாழ்ந்தவர்களல்ல ரென்பதை மேற்கூறிய பாவே மெய்ப்பிக்கும்.

நாவீறு படைத்த நல்லிசைப் புலவர்களின் பொங்கொளியை எங்கும் பரப்பியது இவ் வறுமை யென்னும் மாதகையோனே யெனல் சாலும். புலவர்களை இன்மைப் பிணி இறுக்கியிராதாயின் எந்த மன்னர்களையும், எந்த வள்ளல்களையும் பாடி யிரார்கள். அதனால் நாம் படிக்குந்தோறும் படிக்குந்தோறும் இன்பம் பயக்கும் அவர்கள் தம் சுவைநல மலிந்த செந் தமிழ்ப் பாக்களை இழந்துவிட் டிருப்போம். அவர்கள் பெயர்களும் இது நாள் மறைந்து போயிருக்கு மன்றோ?

நாவன்மை மிக்க நம்புலவர்கள் வறுமை யென்னும் கொடியோனால் வருந்திய காலத்தும் தங்கள் ஒழுக்கங்களிற் சிறிதும் வழுவினார்களில்லை. இம்மையிலும் மறுமையிலும் நலமே தரும் நேரிய பாதையில் நின்று நாட் களைக் கழித்திருக்கின்றனர். பசியால் வருந்தியும் மனச் சான்றுக்கு மாறான வழியிற் செல்லாத புலவர்களின் மனவுறுதியினையும், பெருமையினையுங் கூறுதல் எளிதன்று.

பலகலை யாய்ந்த புலவர்கள், தாம் மன்னர்களைச் சார்ந்த காலத்தும் தம்மியல்பான பெருமித குணம், செருக்கின்மை, உண்மையைக் கூறு மிடத்து எவரிடத்தும் அச்சமின்மை, யாரிடமும் அருள் வழியும் நோக்கு, தம்மை மதியாதாரைத் தாமும் மதியா திருத்தல், விரும்பிக் கொடாத பரி சிலை வேண்டாமை முதலிய அரும்பெருங் குணங்கள் அமையப் பெற்றவர்க ளாகவே விளங்கினர். சான்றாகச் சில புலவர் திலகங்களின் பெருமைகளை ஈண்டு காட்டாகக் காட்டிவரைய விழைகின்றனன்.

அருந்தமிழ் வல்ல பெருந்தமிழ்ச் சாத்தனா ரென்பார் இரண்டாம் நூற் றாண்டின் இடைப் பகுதியில் விளங்கினர். விழுமிய புலவர். சாத்தன் என் னும் இயற்பெயருடைய இவர் இளமையிலேயே பல இலக்கண இலக்கியங் களைக் கற்றுணர்ந்து, நோக்க மமைந்த பாக்களை விரைவில் யாக்கவல்ல

ராய்த் தமிழகம் போற்றச் சாத்தனு ரென்னும் உயர்வு பெற்றுத் துலங்கினர். என்றாலும்,

> "பல்லான்ற கேள்விப் பயனுணர்வார் பாடழிந்
> தல்ல லுழப்ப தறிதிரேல்—தொல் சிறப்பின்
> நாவின் கிழத்தி உறைதலாற் சேராளே
> பூவின் கிழத்தி புலந்து"

என்றபடி புலவருடன் வறுமையாந் தோழன் விரும்பி விளையாட நெருங்கினன். அக்கொடியோன் செயலால் தம் மனைவி மக்கள் பசிப்பிணியால் வருந்துவதைக் காணச் சகியாதவராய், கவிவாணரைக் கனம் பண்ணும் அரசர், வள்ளல் முதலாயினரின் உண்மைக் குணங்களை உள்ளபடி இன் சுவைப்பாக்களால் எடுத்துரைத்து அதனால் வரும் பரிசில் வாழ்க்கையை மேற்கொண்டு, 'விழை பயன் கருதாது மேதினியர்க் குதவும் மழைபோலுத வும் மாமலர்க்கையினை'யுடைய குமண னென்னும் அரச வள்ளலை நாடிச் சென்றார்.

அஞ்ஞான்று தம்பியின் குணக் கேட்டினால் மனவலைப்புண்ட குமணன் காடுறைந்தனனாக, ஆண்டு அரசனைக்கண்டு புலவர் நின்றார். அவரைக் கண்ணுற்ற அரசவள்ளல் புலவருக்குப் பரிசில் வழங்கும் பெற்றியிலில்லாத அப்போதைய தன் நிலைமைக்கு மிகவும் உள நொந்தான். அக்கணமே தன் தம்பி தன் தலையைக் கொணர்வார்க்குச் செம்பொன் கோடி கொடுப்பதாகப் பறையறிவித்திருந்தமை நினைவிற்குவர, உடனே புலவர் கரத்தில் வாளை யளித்து,

> "அந்தநாள் வந்திலீர் அருந்தமிழ்ப் புலவீர்
> இந்தநாள் வந்துநீர் நொந்தனி ரடைந்தீர்
> தலைதனைக் கொடுபோய்த் தம்பிகைக் கொடுத்ததன்
> விலைதனைப் பெற்றும் வறுமைநோய் களைமின்"

என்றார். ஆ! இவ்வரசர் பெருமானின் வள்ளன்மை இருந்தவா றென்னே! இப்பெற்றி வாய்ந்த பெரும் வள்ளல்கள் இஞ்ஞான்று இல்லாக் குறையா லன்றோ நந்தாய் மொழியாம் தமிழ்மொழி அத்துணைச் சிறப்புறாதும், பெரும் புலவர்களிருந்தும் குடத்தின் கண் விளக்கென ஒளி குன்றியுமிருக்க நேர்ந் திருக்கின்றது. நிற்க,

'தலையைக் கொய்துகொள்' ளென்று தான் சிறிதும் எதிர்பாராத வித மாய் வாள் தந்த வள்ளலைப் பார்த்தார் புலவர். தன் மனைவி மக்கள் பசி நோயால் வாடுவரே யென்னும் எண்ணத்தை அறவே மறந்தார். குமணனை எங்ஙனமேனும் சிங்காதனத்தில் ஏறச்செய்து விடுவதெனை உளங் கொண் டார். குமணனை நோக்கி, 'நான்வரும் வரையிலும் என் தலையாகிய உம் தலையைக் காப்பாற்றுவீராக' என்று அறிவித்துவிட்டு, குமணனின் தம்பி யாகிய இளங் குமணனிடஞ் சென்றார். சென்று அவன் மனயினைக் நல் வழியில் திருந்தும் வகையில் தம்மனதில் சுரந்தெழுந்த பின்வரும் விழுமிய பாடலைப் பாடினர்:—

> "மன்னா வுலகத்து மன்னுதல் குறித்தோர்
> தம்புகழ் நிறீஇத் தாமாய்ந் தனரே"
> ......... ...........................

கேடில் நல்லிசை வயமான் தோன்றலைப்
பாடி நின்றனெ னாகச் சொன்னே
பாடுபெறு பரிசிலன் வாடினன் பெயர்தலென்
நாடிழந் ததனினும் நனியின் னாதென
வாள்தந் தனனே தலையெனக் கீய,

......................................

இதைப்பாடியதுடனில்லாது இன்னும் பல அரிய நீதிகளையும், உடன் பிறப்பின் மாண்பினையும் விளங்க எடுத்துரைத்து, இளங் குமணனைத் தன் பிழைகளைத் தானே யுணரும்படிச்செய்து, அவன் தன் அண்ணனிடம் சென்று தன் குற்றத்தைப் பொறுத்து அரசபாரத்தை வகிக்குமாறு தாழ்ந்து வேண்டிக் கொள்ளும்படி அவன் மனதை அத்துணைப்பக்குவமாக மாற்றி விட்டன ரென்றால் புலவரின் ஆற்றல் இவ்வளவினதென்று கூறல் வேண்டுமோ? பின்னும் மன்னர்கள் இவர் வார்த்தைக்கு எத்துணை மதிப்பளித் திருக்கிறார்க ளென்பதும் அறியத் தக்கது. குமணனின் தலையைக் கொண்டு போய்க் கோடி பொன் பெறக் கூடுமாயினும் அச் செயலில் ஈடுபடாத அவரது மேலான மனப் போக்கினையும், இருவருக்கும் ஒற்றுமை யுண்டாக்க வேண்டுமென்று கொண்ட உத்தம சிந்தையினையும் ஊகித் துணரற் பாற்று.

இன்னும் அரசபாரத்தை வெறுத்த குமணனை நோக்கி, "தலைக் கொடை யாளியே! உம்முடைய தலை எமதென்பதை மறந்தீரோ? எமது தலையில் முடி சூடுவதை மறுக்க உமக்கு யாது உரிமையுளது?" என சமயோசிதமாய் அன்பு கனியக் கூறிய உரையில் எத்துணைச் சுவைநயம் பயக்குகின்றது? நிற்க.

நம்புலவர் கோடை மலைக் குரியவனை கடிய நெடுவேட்டுவ னென்னும் வள்ளலிடஞ் சென்று பரிசில் வேண்ட, அவன் எக்காரணத்தாலோ, பரிசில் கொடாது காலந்தாழ்த்தியதைக் கண்ட புலவர், வெகுண்டு, கடிய நெடுவேட்டுவனை நோக்கி,

"முற்றிய திருவின் மூவ ராயினும்
பெட்பின் றீதல் யாம் வேண்டலமே
......................................"
நோன்சிலை வேட்டுவ! நோயிலை யாகுக!

......................................

என பெருமிதத்துடன் கூறினர். இதைச் செவி மடுத்த வேட்டுவன் புலவர் தன்னை 'நோயிலை யாகுக' வென்று குறிப்பு மொழியால் சபித்துச் செல்லுகிறா ரென்றஞ்சி 'தொல்லாணை நல்லாசிரியர் திறத்தில் என் செய்தோம்' என உளனைந்து புலவரை மன்னிக்கும்படி வேண்டி அவரை யழைத்துவந்து பரிசில் தந்து அனுப்பினனாயின், மன்னர்களிடத்தில் புலவர் எத்துணைப் பெருமைப்பட வாழ்ந்திருக்க வேண்டும்? மற்றும் அவர் ஆகவோ, கெடவோ சொல்லிய சொல்லியாங்கே நிறைவேறுகின்றதெனில், புலவர் தெய்வத்தன்மை பொருந்தியவ ரென்று கூறுவதை மறுப்பார் யாருளர்? இதற்கு இவர் வாய்ப்பட்ட மூவனென்னும் சிற்றரசன் சேரமான் கணைக்காலிரும் பொறையால் அழிவுண்ட தொன்றே போதிய சான்றாகும்.

தோட்டிமலைக் குரியவனை கண்டீரக்கோப் பெருநற் கிள்ளியின் தம்பி இளங் கண்டீரக்கோ என்பானை நம்புலவர் கண்டு, அவனை அன்பின் பெருக்

கினால் தழுவி மகிழ்ந்திருக்க, அவ்வமயம் ஆண்டிருந்த நன்னனென்னும் வேளிர்குலத் தலைவனது வழித் தோன்றலாகிய இளவிச்சிக்கோ தன்னைத் தழுவாமைக்குக் காரணங் கேட்க,

*"புனல்தரு பசுங்காய் தின்றதன் தப்பற்
கொன்பதிற் றொன்பது களிற்றோ டவள்நிறை
பொன்செய் பாவை கொடுப்பவுங் கொள்ளான்,
பெண் கொலை புரிந்த நன்னன்"

மரபில் நீ தோன்றியுள்ளமையின் எம்மவரான புலவர்கள் உம்மைப் புகழா தொழிந்தனர். நாம் தழுவாமைக்கும் அதுவே காரண மென விடை யிறுத்தார். இதனால் அரசனேயாயினும் அவரிடத்துப் பழிபயக்குஞ் செயல்காணப் படின் அன்னாரைப் பாடுதலும் மதித்தலுஞ் செய்யாது வெறுத்துரைக்கும் பெருமித குணமுடையாரென்பது பெறப்படும். நிற்க,

மடமறு புலமை முடமோசியா ரென்னும் புலவர் பெருந்தகையின் விழுமிய குணங்களைச் சற்று விசாரிப்போம். இவர் இரண்டாம் நூற்றாண்டின் முற்பகுப்பில் திகழ்ந்தவரென்று தெளியப்படுகிறது. இவர் பிறவியில் அங்கமுடவராயினும், தமிழ்ப்புலமையிலும், குண வொழுக்கங்களிலும் முடம்பட்டவரன்று. பாண்டி நாட்டிலுள்ள மோசிகுடி யென்னும் பதியிற் றோன்றிய இவரை உறையூர்ச் சோழனாகிய முடித்தலைக்கோப் பெருநற்கிள்ளி போற்றி யுபசரித்து, புலவரைத் தன்னூரில் சின்னாளேனும் வதிந்து செல்லுமாறு வேண்டினனெனில், புலவரின் பெருமை கூறாமலே விளங்கும்.

புலவர் கருவூரை யடைந்து சேரமான் அந்துவாஞ்சேரலிரும்பொறை யென்னும் அரசனைக் கண்டு அவனால் வரவேற்கப்பட்டுப் பெருமையுடனிருக்குங்கால், சோழன் கோப் பெருநற்கிள்ளி தனது உறையூர்ப் புறத்துக் களிறூர்ந்துவர, அது மதப்பட்டு, சோழனுக்குத் துணையாய் வந்த வாள்மறவர் முதலியோர் பின்னேவர, யானை விரைவாய் வந்து கருவூரை யடைய இவர்களைக் கண்ணுற்ற சேரன் யாரோ தம்மீது படைகொண்டு வருகின்றனரென்றெண்ணி, கண்கள் சிவக்கப் புலவரை நோக்கி "களிறூர்ந்து வரும் இவன் யாவனெனக் கூறுவீரா?" என்று வினவ, புலவர் தம் நுண்ணறிவினால் வருவோன் தன் பழைய நேயனாகிய சோழனென்பதையும், அவன் பகைகொண்டு அங்ஙனம் வரவில்லை யென்பதையு முணர்ந்து அதைச் சீரிய செந்தமிழ்ப்பாட்டால் (புறம் 13) சேரனுக்கு விளங்கக் கூறி சேரன் பகைவனாகிய சோழன் சுகமே அரண்மனை சேர்வானென, அவன் முன்னிலையிலேயே கழறிய வுரையில் புலவரின் பேரருள், நன்றியறிதல், உண்மை நெறியில் அரசர்க்குமஞ்சாமை முதலாய குணங்கள் துள்ளியெழுகின்றன. மற்றும் சோழன் பகைமை கொண்டுவரவில்லை யென்பதை நொடிப்பொழுதி லுணர்ந்த இவர் கூரியமதி அளத்தற்கரிதன்றோ? அதுவேயன்றி உலகியலறிவும், அரசியலறிவும், சாலப்படைத்தவ ரென்பதும் விளங்கும்.

கடையெழு வள்ளல்களி லொருவனாகிய ஆய் என்பானை நம்புலவர் நண்ணி அவனால் பெருமையுற்றுத் திகழ்ந்த காலத்தில் ஆயின் பெருங் குணங்களில் ஈடுபட்டு, முன்னமேயே இவனை யடையாது போயினோமே யென வருந்தி,

*பரணர் பாடியது.

முன்னுள்ளு வோனைப் பின்னுள்ளி னேனே
ஆழ்கென் னுள்ளம் போழ்கென் னாவே
பாழூர்க் கிணற்றின் தூர்கவென் செவியே
.........................................................

என்று தன் உள்ளத்தையும், நாவையும், செவியையும் வெறுத்துக் கூறுகின்றமைகொண்டு, இவர் ஏனையோரைப் பாடியது கேவலம் நிலையில்லாச் செல்வத்தை விரும்பியல்லவென்பதும், பரிசில் பெற, இல்லாதவைப் புனைந்து பாடத் துணியாத தூய்மையுடைய வாய்மையாள ரென்பதும், உத்தமர் கூட்டுறவில் அவாமிக்குடையாரென்பதும் பெறப்படும். ஆய் காலமாறுபாட்டால் வறுமையை யடைய அக்காலத்தும் புலவர் அவனை விட்டு நீங்காது அவன் மாட்டு உளங்கனிந்த பாட்டுகளைப் பாடிக்கொண்டிருந்து, ஆய் இறக்க, அவன் விட்டகன்று தம்மூரையடைந்து, ஆயையும், அவனுடைய பேரன்பையும் நினைந்து நினைந்து உளம்வாடி உடலைவிட்டுப் பொன்னுலகடைந்தா ரெனின், புலவரின் உத்தம நட்பையும், சீரிய சிந்தையையும் ஊகித்துணர்வதே சிறப்புடைத்து. அப்பால்,

பாவாணர்புகழ் கோவூர் கிழாரென்னும் புலவர் பெருமானின் பெருமைகளைச் சிறிது ஆராய்வோம். இவர் சிறப்புற வாழ்ந்தது இரண்டாம் நூற்றாண்டின் இடைப்பகுதியில். இவர் காலத்தரசனாகிய சோழன் நலங்கிள்ளி யென்பான் புலவரை விரும்பி யழைக்க, அவன் பால் சென்று, அன்பினை யள்ளிப் பருகி, அவனது அவைக்களத்திலிருந்து அவனது வீரம், நியாயம், ஈகை முதலியன விளங்கத் தேனினுமினிய சுவைவழியும் பைந்தமிழ்ப் பாக்களைப்பாடி, சோழன் மனதுக்குங் களிப்பூட்டிப் பெருமை கொண்டவர்.

ஒரு சமயம் சோழர் குடிப்பிறந்த நெடுங்கள்ளி யென்பானுக்கும் இந்நலங்கிள்ளிக்கும் அரசுரிமைபற்றிப் பல வழக்குகள் நடந்து அவை முற்றிப் பகைமூண்டு போர்நடக்க, அப்போரில் வன்மையற்ற நெடுங்கிள்ளி சோணாட்டு ஆவூர்க்கோட்டையை அரணாகக்கொள்ள, நலங்கிள்ளியோ அக்கோட்டையை வளைத்துக்கொண்டான். கோட்டை முற்றுகை பலநாள் நீடிக்க, உள்ளிருந்த மக்கள் உணவில்லாமையின் வருந்தினர். அப்போது நம்புலவர் விரைந்து சென்று அடைத்துக்கொண்டிருக்கும் நெடுங்கள்ளியைக் கண்டு, முதலில் அவனைப் பலபடப் புகழ்ந்து, பின்னர்

"..........................................................
துன்னருந் துப்பின் வயமான் தோன்றல்!
அறவை யாயின் நினதெனத் திறத்தல்
மறவை யாயிற் போரொடு திறத்தல்
அறவையும் மறவையும் அல்லை யாகத்
திறவா தடைத்த திண்ணிலைக் கதவின்
நீண்மதில் ஒருசிறை ஒடுங்குதல்
நாணுத்தக வுடைத்திது காணுங் காலே"

என்ற பொருள் பொதிந்த பாடலைக்கூற, அரசன் அடைமதிலைத் திறந்து விட்டான். ஈண்டுப் புலவர் மொழி எத்துணை சிறந்திருக்க அரசன் அப்பொழுதே ஏற்றுக்கொண்டிருக்க வேண்டுமென்பது அறியத்தக்கது. இன்னும் அரசனுக்குக் கூறுமுகத்தான் தன் மனப் போக்கினையும் ஒருவாறு காட்டி யிருப்பது சிந்திப்பார்க்குப் புலனாகும். (தொடரும்.)





## கிருஷ்ணாலிங் அல்லது துப்பறியும் சீடன்.

(254-ம் பக்கத் தொடர்ச்சி)

**ஆரணி-குப்புசாமி முதலியார்.**

## 12-வது அத்தியாயம்

ஆனந்தலிங் கடைசியில் மனோன்மணியை நோக்கி "குழந்தாய்! நீ யொன்றுக்கும் துயரப்படவேண்டாம். கடைசியில் யாவும் சந்தோஷமாகவும் க்ஷேமமாகவும் முடியும்.

ஆனந்தலிங் அதன்பிறகு இராஜவேலைத் தனியாயழைத்து, "காலை யென்ன சங்கதி நடந்தது சீக்கிரம் கூறு" என்றான்.

இராஜவேல்:—"ஏறக்குறைய நீர் கூறியபடியே நடந்தது. ஒருவன் ஒரு சீட்டு கொண்டுவந்து, உலகநாதம் பிள்ளை யழைத்து வரச் சொன்னார் என்றான். நான் அவ்வாறே சென்றபோது அவர் என்மேல் கோபம் கொண்டு மிக்க அவமானமாய் வைததோடு அவர் மனைவி தடை செய்யா திருந்தால் என்னை யடித்தேயிருப்பர்" என்றான்.

ஆனந்:—அவர் மனைவி யெவ்வாறு நடந்து கொண்டாள்?

இராஜ:—அம்மாது மிக்க சாந்தமாகவே யிருந்தாள். ஆனால் அவள் முகம் வெளுத்திருந்ததோடு, உள்ளத்தில் அவரைவிட அதிக வேதனைப் பட்டுக்கொண் டிருப்பதாய்த் தோன்றியது. அவள் என்னிடம் பட்ச மின்றி ஒன்றும் கூறவில்லை. ஆனால் எனக்காகப் பரிதாபப்படுவது போலும் அச்சப்படுவது போலும் தோன்றியது. உலகநாதம் பிள்ளை "கள்ளப்பயலே" என்று கூறிக்கொண்டு ஒருகடிதத்தை யென்னிட மளித்து வாசி வாசி யென்றார். அக்கடிதத்தில் கூறப்பட்ட சங்கதி கள் மட்டும் உண்மையாயின் அவர் என்னைப் பேசிய தெல்லாம் பூரண நியாயமே யாகும். அக்கடிதத்திலிருந்த அனைத்தும் எனக்கு நன்றாய் நினைப்பில்லை. அது மனோன்மணி தன் தந்தைக்கு எழுதியதா யிருந்தது. நான் அவளைத் தன் தந்தையின் பணத்தைக் களவாடிக் கொண்டு என்னோடு ஓடிவந்து விடும்படி தூண்டியதாகக் கூறப்பட் டிருந்தது. நான் கோபத்தோடு அக்கடிதத்தில் கூறியிருந்த யாவும் பொய்யொன்று மறுதலித்ததோடு மனோன்மணி புத்தி சுவாதீனத்

தோடு இதை யொருபோதும் எழுதியிருக்க மாட்டாள் என்றேன். நான் முதலில் என் வார்த்தைகள் அவர் மனதில் உறுத்தி யிருக்குமென்றே நினைத்தேன். அதற்குள் அவர் திடீலென்று "அ! ஆ! சரியாய் நாம் எச்சரிக்கப்பட்டபடியே கூறுகிறான்" என்றார். உடனே அவர் எழுந்து என்னைப் பிடித்துக்கொண்டு என் ஜேபியிலிருந்தவற்றைப் பிடுங்கிக்கொண்டார். அவற்றில் அக்கடிதங்களும் அந்த ஆயிர ரூபாய் உண்டியு மிருந்தன. அச்சமயம் அவரிடம் ஒரு ஆயுதமிருந்து அவர் மனைவியும் அவரைக் கெட்டியாய்ப் பிடித்துக்கொண்டு வேண்டிக்கொண்டிராவிட்டால் அவர் என்னைக் கொன்றுவிட்டே யிருப்பார். அம்மாது அவரை பிடித்துக்கொண்டு என்னைத் துரிதமாய் வீட்டை விட்டுப் போய்விடும்படி வேண்டிக் கொண்டாள். நான் வெளிவரும் போது கிழவன் "ஐயோ என்மகளே! மகளே!" என்று கூறும் போது இராஜவேல் கண்களில் நீர் பெருகியது. நான் மறுபடிசென்று அவருக்கு "இவையாவும் பொய் யென்றும் ஒரு கள்ளக் கூட்டத்தாருடைய சூதென்றும், கடிதங்க ளெல்லாம் கள்ளக் கையொப்ப மிடப்பட்டவைக ளென்றும், நான் உன் கூடச் சேர்ந்து வேலை செய்வதையும் கூறலாமென்று நினைத்தேன்; ஆனால் நீ செய்த எச்சரிக்கையை நினைந்து திரும்பிவந்து விட்டேன்" என்று முடித்தான்.

ஆனந்:—நல்ல காரியம் செய்தாய். மனோன்மணி ஒரே பிடிவாதமாய்த் தன் இரகசியத்தைக் கூறமாட்டே னென்கிறாள். அவள் இழிவான நடக்கையில் பிரவேசிப்பவ ளென்று நான் நினைக்கவே மாட்டேன். ஆயினும் கூறியிருந்தால் கஷ்ட மில்லாமலே இரகசியத்தைக் கண்டு பிடிக்கலாம். எப்படியாயினும் அவளே சம்மதிக்கிற வரையில் அவள் அகப்பட்ட சங்கதியை யாருக்கும் வெளியிடுவதில்லை யென்று வாக்களித்திருக்கிறேன்; நீயும் அதற்குச் சம்மதிக்கவேண்டும். பதிலுக்கு அவள், தான் நம்மிருவருக்கும் தெரியாமல் மறைந்து கொள்வதில்லை யென்று வாக்களித்திருக்கிறாள்.

இராஜவேல்:—மனப் பூர்வமாய் அப்படியே செய்கிறேன்.

ஆனந்:—கிட்டு மனோன்மணி யொளித்துக்கொண்டிருந்த விடத்தி லிருந்து அவளை யெப்படி வெளிவரச் செய்தான்?

இராஜவேல்:—நான் எழுதியதாக அவளுக்கு ஒரு கள்ளக் கடிதம் எழுதியனுப்பினான். அவள் முதலில் சந்தேகித்து வர மறுத்துவிட்டாள். பிறகு அவன் தந்திரமாய்க் கூறிய மொழிகளால் ஏமாந்து நம்பிக் கொண்டாள். பிறகு அவனோடு வண்டியில் ஏறியது முதல் மிக்க திகில் கொண்டாள். நான் விஷயங்களைச் சுருக்கமாய்க்கூறி நாமிருவரும் காப்பாற்ற வந்ததாகக் கூறிய பின்பே சாந்த மடைந்தாள்.

ஆனந்:—மிக்க வந்தனம் இப்போது நான் இன்னொரு முறை மனோன்மணியைத் தனியே கண்டு பேசிவிட்டு வருகிறேன். பிறகு நாம் செல்லலாம்.

இராஜ:—நாமா? நான் கூடவா?

ஆனந்:—ஆம். நீயிப்போது மனோன்மணியோடு இந்த வீட்டிலிருக்கலாகாது.

இராஜ:—ஆம் ஆம். ஆயினும்......சே......இல்லை யில்லை. நான் உன்னைப் பூரணமாய் நம்பி முடிவுவரையில் நீயெப்படிக் கூறுகிறாயோ அப்படியே நடக்கச் சித்தமா யிருக்கிறேன்.

ஆனந்தவிங் மனோன்மணியைக் கண்டு "அம்மா கிட்டு என்பவன் உன்னை யேமாற்றி யிங்கழைத்து வருவதற்காகக் கொடுத்த கடிதத்தைக் காட்டுகிறாயா கொஞ்சம்?" என்றான்.

மனோன்மணி நாணமடைந்து அங்கிருந்த செகிடித் தீயைச் சுட்டிக் காட்டி "அக்கடிதத்தைக் கொளுத்தி விட்டேன்" என்றாள்.

ஆனந்தவிங் கடிதம் எரிந்திருக்கிறதென்று கண்டான். ஆனந்தவிங் செல்லத் திரும்பினான். மனோன்மணி மெதுவாய்ச் சென்று அவன் தோளைப் பற்றினாள். ஆனந்தவிங் வியப்போடு திரும்பிப் பார்த்தான்.

மனோன்மணி:—இவ்விஷயத்தை இத்தோடு விட்டுவிடலாகாதா? இன்னும் இதில் உள்ளே நுழைவதில் நீர் ஒரு நன்மையும் செய்ய முடியாது. நீர் என்னை நம்புவதாய்த் தெரிகிறது. இனி இன்னும் இதைப்பற்றி ஆராய்வதில் ஒரு பயனும் இல்லை யென்று எனக்கு நன்றாய்த் தெரியும் என்று நான் கூறுவதை நீர் நம்பமாட்டீரா?

ஆனந்தவிங்:—குழந்தாய்! நான் உன்னைப் பூர்ணமாய் நம்புகிறேன். நீயுன் கடமையென்று நினைக்கிறதைச் செய்கிறாய். நானும் என் கடமையைச் செய்கிறேன் என்பதை நீ பூரணமாய் நம்பவேண்டும். அதோடு நன்மை யுண்டாகுமென்று தெரிந்தாலொழிய எனக்கு எந்த இரகசியம் தெரிந்தாலும் அதை வெளியிடமாட்டேன். இப்போது உனக்குத் திருப்தி தானே?

மனோன்மணி:—"நான் திருப்தி யடையவேண்டியதே. இல்லை இல்லை. அப்படிக் கூறமாட்டேன். நான் திருப்தியே யடைந்தேன். நான் உம்மை நம்புகிறேன். நம்பப் பிரியமே. நமக்கெல்லாம் முன்போல் நிம்மதியும் சந்தோஷமும் கிடைக்கும்படி ஆண்டவன் அருள் புரியவேண்டும்" என்றாள்.

ஆனந்தவிங் திரும்பிவந்து இராஜவேலிடம் பேசியபோது அவன் கண்களில் சந்தேகமான குறி யிருந்தது.

அவன் இராஜவேலை நோக்கி, "அவள் மிக்க பெருந்தன்மை யுடையவள். நான் வண்டி யழைத்து வரப்போகிறேன். ஆனால், உன்னை யிப்படியே

யழைத்துக்கொண்டு போகலாகாது. ஏனெனில் அத்துஷ்டப் பயல்கள் உன்னைக் கண்டால் நீ யென்று தெரிந்துகொள்ளலாகாது'' என்று கூறி இராஜவேலை யுருமாற்றிவிட்டான். இராஜவேல் மனோன்மணியிடம் சென்று "நான் போய்வருகிறேன்'' என்று கூறியபோது, இவன் யாரென்று அவளுக்குச் சற்றேனும் புலப்படவில்லை.

***

இவர்கள் சம்பாஷித்ததில் மிக்க காலம் சென்றது. ஆனால் ஆனந்தஸிங்குக்கு எதிரிகள் தன்னைப் பிச்சன் என்று நினைத்துக்கொண்டு எங்கே இவர்களில் யாராவது கண்டு இன்னும் பின் தொடர்வார்களோ என்ற கலவரத்தால், பொழுதமர்ந்து இருள் சூழட்டுமென்பதே அவனுடைய பிரியம். ஆகையால் வண்டியை ஹோட்டலில் விட்டுவிட்டுத் தான் உடைகளை யெல்லாம் ஒரு மூட்டையாய்க் கட்டி யெடுத்துக்கொண்டு இராஜவேலை யழைத்துக்கொண்டு கால் நடையாய்ப் புறப்பட்டான்.

ஆனந்தஸிங் இராஜவேலை நோக்கி "நீ யிருக்கும் இடத்தைவிட நிம்மதியான இடம் எங்காவது இருக்கிறதா ?'' என்றான்.

இராஜவேல்:—ஒரு ஹோட்டலிருக்கிறது. அது மிக்க நிம்மதியானது. ஆனால் நன்றாய் அலங்காரம் செய்யப்பட்டதல்ல.

ஆனந்தஸிங்:—அதைப்பற்றி அவசியமில்லை. பணம் இருந்தால் இப்போதுகூட எல்லாம் செய்துகொள்ளலாம். நமக்கு வசிக்கத் தனியிடம் வேண்டும்.

இராஜவேல் கஷ்டமில்லாமலே தகுதியான ஒரு ஹோட்டலைக் கண்டுபிடித்துவிட்டான். உடனே அறைகள் வாடகைக்கு எடுத்துக்கொள்ளப்பட்டன. இருவரும் போஜனம் செய்துவிட்டு ஒரு அறையில் உட்கார்ந்த போது ஆனந்தஸிங் "இராஜவேல்! நீ இரவு எங்கும் செல்லாமல் இங்கேயே யிருக்கவேண்டும். இப்போது நாம் இங்கிருப்பது யாருக்கும் தெரியாது. நான் வெளியில் செல்லவேண்டிய வேலை யிருக்கிறது. இங்கு மதிக்கத்தக்க சிப்பம் ஒன்று வைத்துவிட்டுச் செல்கிறேன். நீ இங்கேயே யிருக்கிறாய் என்று தெரிந்தால் என் மனதிற்கு நிம்மதியா யிருக்கும்'' என்றான். (தொடரும்.)



# வர்த்தமானப்பகுதி

**குதிரைச் செவிலித் தாய் :—**

குதிரைகள் செவிலித் தாயார்களாய் இருப்பது அபூர்வம். ஆனால் டான்ட்சே என்னும் ஊரில் அத்தகைய குதிரையொன்றுள்ளது. அது ஜே. பட்லர் என்னும் குடியானவருடையது. அவர் அதற்கு மூன்று மாத காலத்திற்குள், குழந்தைகள் உட்காரும் சிறு விளையாட்டு வண்டியைத் தள்ளிக்கொண்டு போவதற்கும், மணிபார்த்துக் கூறுவதற்கும், தன்னுடைய வயதையும் தன் எஜமானரின் வயதையும் கணக்கிடுவதற்கும், ஒரு பெருங் கூட்டத்தில் தனக்குத் தெரிந்த ஒருவரை பொறுக்கிக் காட்டுவதற்கும், செத்தாற்போன்று மூச்சடக்கிக் கிடப்பதற்கும், ஒரு மேஜையின்மேல் ஏறி நிற்பதற்கும் கற்றுக் கொடுத்துள்ளார். இக்குதிரை நாலே வயதான சிறு குட்டி. மற்றொரு ஒன்பது வயதானக் குட்டிக் குதிரைக்கு ஜனங்களுடன் கைகுலுக்குவதற்குக் கற்றுக்கொடுத்துள்ளார். மிருகங்களைப் பழக்குவதற்கு முதல் முதலாக வேண்டப்படும் முக்கிய குணம் கருணை என்றும், ஆனால் கருணையோடு அதிகாரமும் பிடிவாதமும் கலந்திருக்க வேண்டுமென்றும் அவர் கூறுகின்றார்.

***

**கழுத்தே காது:—**

பெருத்த சப்தமுடைய யந்திரசாலைகளிலும், சுரங்கங்களிலும் பேச முடியாமலும், பேச்சைக் கேட்க முடியாமலும் போய்விடுகிறது. இதை நீக்குவதற்குப் புதிதான ஓர் யந்திரம் கண்டு பிடிக்கப்பட்டுள்ளது. டெலிபோனின் வாய்போன்றுள்ள ஒரு யந்திரத்தைக் கழுத்திலாவது அல்லது கன்னத்திலாவது பொருத்திக்கொண்டால் பக்கத்தில் யார் பேசுவதும் நன்றாகவும், தெளிவாகவும், சந்தேகத்திற் கிடமின்றியும் கேட்க முடிகின்றதாம்.

மற்றொரு யந்திரம் ஒரு கப்பலை கொந்தளிக்கும் சூறைக் காற்றுச் சுழலிலும், எதிர்த்த நீரோட்டங்களிலும் கூட வழிதப்பாது கொண்டு போகுமாம். போகும் வழியில் ஏதாவது தடங்கலிருந்தால் ஓர் மணியை அடித்து அதைப்பற்றித் தெரிவிக்குமாம்.

கடற் காய்ச்சல் வராமல் தடுக்கக் கூடிய ஒருவித புகையை ஒருவர் கண்டு பிடித்துள்ளாராம். மனிதன் நாம் மேற்கூறிய ஜனோபகாரமான யந்திரங்களைக் கண்டு பிடிப்பதை விட்டு ஜனநாச யுத்த யந்திரங்களைப் பற்றி அதிக அக்கரை யெடுத்துக் கொள்வது வருந்தத்தக்கது.

***

**திருட்டுப் புறா:—**

சமீபத்தில் புறா மூலம் ஒருவரை பயமுறுத்திப் பணம் தட்ட முயற்சித்த ஒருவர் போலீசாரால் பிடிக்கப்பட்டுள்ளார். ஜர்மானியர் ஒருவர் ஒரு நாள் காலை தனக்கு வந்த ஓர் பார்சலை உடைத்துப் பார்த்தபோது அதில் ஓர் புறாவும் அதன் காலில் ஓர் கடிதமும் இருந்தன. அக்கடிதத்தில் குறித்த காலத்துள், ஓர் பெருந் தொகையைக் குறிப்பிட்டு அதைக் கொடுக்கத் தவறினால் அவர் கோரமாகக் கொலை செய்யப்படுவாரென்று எழுதப்பட்டிருந்தது. இப்புறாவைத் தொடர்ந்து ஆகாய விமானத்தில் சென்று குற்றவாளியின் வீட்டுப் பக்கத்தில் இறங்கி அவனைப் பிடித்து விட்டனர்.

# " ஆனந்தபோதினி " பஞ்சாங்கம்.

**சுக்கிலஞு மார்கழிமீ—கலியுகாதி 5031, சாலிவாகனம் 1852,**

**பசலி 1339—கொல்லமாண்டு 1105—ஹிஜரி 1348,**

**இங்கிலீஷ் 1929ஞு டிசம்பர்மீ—1930ஞு ஜனவரிமீ**

| மார்கழிமீ | டிசம்பர்மீ | வாரம். | திதி. | நக்ஷத்திரம் | யோகம். | விசேஷங்கள். |
|---|---|---|---|---|---|---|
| 1 | 15 | ஞா | சது35-5 | கிரு0-50<br>ரோ54-48 | சித்60 | ஷடசீதி புண்யகாலம்,<br>தனு-ரவி-நா-9-35,மூல<br>கார்த்திகை நா-8-55 |
| 2 | 16 | திங் | ○26-40 | மிரு47-53 | அ47-53சி | பௌர்ணமி, சந்திரபூஜை,<br>ஸ்ரீ நடராஜ அபிஷேகம் |
| 3 | 17 | செவ் | பிர17-35 | திரு40-38 | மர40-38சி | ஆருத்திரா தரிசனம் |
| 4 | 18 | புத | துதி8-28<br>திரி59-35 | புன33-18 | சித்60 | அவமாகம், இருஷியாரம்<br>பம், உழவு செய்ய |
| 5 | 19 | வியா | சது51-33 | பூச26-38 | அ26-38சி | சங்காஷ்ட சதுர்த்தி |
| 6 | 20 | வெ | பஞ்44-35 | ஆயி20-55 | மர60 | கரிநாள், அவமாகம் |
| 7 | 21 | சனி | சஷ்38-53 | மக16-25 | அ16-25சி | கானியம் செலவிட |
| 8 | 22 | ஞா | சப்35-0 | பூர13-28 | சி13-28அ | காலபைரவாஷ்டமி |
| 9 | 23 | திங் | அஷ்32-50 | உத்12-18 | சித்60 | கரிநாள், அஷ்டகஸ்ராத்தா |
| 10 | 24 | செவ் | நவ32-28 | அஸ்12-53 | சித்60 | திஸ்ரோஷ்டகா |
| 11 | 25 | புத | தச33-45 | சித்15-8 | சித்60 | கரிநாள் |
| 12 | 26 | வியா | ஏகா36-28 | சுவா18-43 | அ18-43சி | சர்வ மத்வ ஏகாதசி |
| 13 | 27 | வெ | து40-23 | விசா23-33 | சித்60 | வியாதியஸ்தர் குளிக்க |
| 14 | 28 | சனி | திர45-13 | அனு29-18 | சித்60 | சனிப் பிரதோஷம் |
| 15 | 29 | ஞா | சது50-40 | கே35-45 | ம35-45அ | மாச சிவராத்திரி |
| 16 | 30 | திங் | அ●56-35 | மூல42-40 | சி42-40மர | சர்வத்ர அமாவாசை |
| 17 | 31 | செவ் | பிர60 | பூரா49-58 | சி49-58அ | திருதினஸ்பிருக் |
| 18 | 1930ஞு ஜனவரிமீ 1 | புத | பிர2-45 | உத்57-20 | அ57-20சி | |
| 19 | 2 | வியா | துதி9-10 | திரு60 | சித்60 | |
| 20 | 3 | வெ | திரி15-33 | திரு4-45 | மர4-45சி | |
| 21 | 4 | சனி | சது21-38 | அவி11-50 | சி11-50அ | |
| 22 | 5 | ஞாய | பஞ்26-58 | சத18-30 | சித்60 | |
| 23 | 6 | திங் | சஷ்31-20 | பூர24-10 | ம24-10சி | |
| 24 | 7 | செவ் | சப்34-13 | உத்28-33 | அ28-33சி | |
| 25 | 8 | புதன் | அஷ்35-20 | ரே31-15 | மர60 | |
| 26 | 9 | வியா | நவ34-30 | அஸ்32-0 | அ32-0சித் | |
| 27 | 10 | வெ | தச31-40 | பர30-45 | சித்60 | |
| 28 | 11 | சனி | ஏகா26-50 | ⁂கி27-35 | அமி60 | கிருத்திகை,சர்வ,மத்வஏகா<br>தசி, வைகுண்ட ஏகாதசி |
| 29 | 12 | ஞா | து20-3 | ரோ22-33 | சித்60 | சுபமுகூர்த்தம் செய்ய |
| 30 | 13 | திங் | திர11-50 | மிரு16-10 | அ16-10சி | அவமாகம்,போகிபண்டிகா |

| | | | |
|---|---|---|---|
| | ராகு | குரு | |
| | 5-தனு-செ<br>11-தனு-சுக்<br>14-மகர-புத | | |
| பு-சூ<br>சனி | செவ்<br>சுக் | கேது | |

**PRINTED & PUBLISHED BY N. MUNISAWMI MUDALIAR,**

**AT THE "ANANDA BODHINI" POWER PRESS,**

**LAWYER CHINNATHAMBI MUDALI ST., MADRAS.**